வெளிவந்துவிட்டது! வெளிவந்துவிட்டது!!

100-பக்கங்கள் கொண்ட சித்திரபானு வருஷத்திய

(சோதிர ஜீவ நட்சத்திராதி சாந்திர ஸௌரமான) சர்வ முகூர்த்த

# "ஆனந்தபோதினி"

## சுத்த திருக்கணித பஞ்சாங்கம்.

நமது வானசாஸ்திரக் கணிதத்திலும், ஆங்கில வானசாஸ்திரக் கணிதத்திலும் திறமைவாய்ந்த, ஸ்ரீமான் C. G. ராஜன், பி. ஏ. (B. A. Mathematics) அவர்களால் சுத்தமாக இப்பஞ்சாங்கம் கணிக்கப்பட்டது.

பஞ்சாங்கம் 1-க்கு விலை அணா 3.

தனிப் பஞ்சாங்கம் வேண்டுவோர் விலையோடு தபாற்கூலி 1¼-அணா சேர்த்து தபால் பில்லைகளாக அனுப்பவும்.

25-பஞ்சாங்கங்கள் ரூ. 4—6—0.

25 பஞ்சாங்கம் வேண்டுவோர் ரூ. 4—6—0-ம் மணியார்டர் அனுப்பி சமீபமான ரயில்வே ஸ்டேஷனையும் தெரிவித்தால் ரயில் பார்சலாய் அனுப்பப்படும். ரயில் செலவை செலுத்திப் பெற்றுக் கொள்ளவும்.

ஆனந்தபோதினி ஆபீஸ்,
தபால்பெட்டி நெ, 167, மதராஸ்.

## ஸ்திரி புருஷ ஜாதகத் திறவுகோல்

ஜோதிடரை விரும்பாமலே ஒவ்வொருவரும் தாம் தாமே ஜாதக கணிதம் பண்ணவும், 9 கிரகங்களை 12 இராசிகளில் அடைத்து ஆட்சி யுச்ச நிலைகளைக்கண்டு பலாபலன் சொல்லவும், இராசியில் 7 கிரகங்கள் ஒன்றுகக்கூடி யிருப்பினும், இரண்டு மூன்று கிரகங்கள் சேர்ந்திருப்பினும் வேறு விதமாக மாறி மாறியிருப்பினும் அவைகட்கு அனுபவமாகப் பலன் தெரிந்து சொல்லவும் இதனுல் தெரிந்து கொள்ளலாம். இதன் விலை அணா 8.

## நிமித்தியகுறி சாஸ்திரம்.

இந்த நிமித்தியகுறி சாஸ்திரத்தில் மனிதர்கள் மனதில் நினைத்துக் கொள்ளும் காரியங்களையும் அவற்றின பலாபலன்களையும் அறிந்து சொல்லும் மார்க்கங்கள் விளக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றன. இது சகல மதஸ்தர்களுக்கும வர்த்தகர்கள், சோதிடர்கள், விவசாயிகள், மௌலவிகள், வைத்திய நண்பர்கள், பிரயாணிகள், வக்கீல்கள், உத்தியோகஸ்தர்கள் முதலாகிய எல்லாக் கனவான்களிடத்தும் அவசியமிருக்க வேண்டியது. விலை அணா 2.

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபாலபெட்டி நெ. 167, மதராஸ்.

### காதலருக்கு இன்பந்தரும் நூதன நூல்

# இன்பவாழ்க்கையின் இரகசியங்கள்

அழகிய சீமை கலிகோ பைண்டு செய்யப்பட்டு கண்ணைக் கவரத்தக்க அநேக ஆர்ட்டோன் படங்களுடன் **400** பக்கங்களுக்கு மேல் அழகிய பெதாவெயிட பேபரில் சுத்தமான எழுத்தில் அச்சிடப்பட்டது.

**(நான்காம் பதிப்பு)** **இதன் விலை ரூபா 2.**

*ஆனந்தபோதினி சந்தாதாரர்களுக்கு விலை ரூபா 1—8—0.*



***இது காதலர்க்கு இன்பந்தரும் நூதன நூல்; போகானந்தத்தை விரும்பும் பூமான்கள் ஆவலுடன் எதிர்பார்த்திருந்த ஆனந்த இரகசிய சாஸ்திரம்.***

***இது காதல் இன்பத்தை உள்ளவாறுணர்ந்து அனுபவித்து, இல்வாழ்க்கையை நல்வாழ்க்கையாக நடத்திப் பேரானந்தக் கடலில் மூழ்கி நற்சந்ததியைப்பெற்று, மறுமைப் பயனையும் அடைதற் கேதுவாயிருக்கும்படி பற்பல இன்பமார்க்கங்கள் நிறைந்த இந்நூல் இப்போது இனிய தமிழ்நடையில் வெளியிடப் பெற்றிருக்கிறது. இதில் நமது பூர்வீக கொக்கோக சாஸ்திரத்தின் சாராம்சங்களும், அகப்பொருள் நூல்களின் கருத்துகளும், தேசதத்துவ சாஸ்திரங்கள், வைத்திய சாஸ்திரங்கள் முதலியவற்றிற் கூறப்பட்டிருக்கும் பல அரிய விஷயங்களும், நாகரம், தெலுங்கு, கன்னடம், மராட்டி, அரபி, இந்துஸ்தானி, பார்ஸி, இங்கிலீஷ், பிரென்ச் முதலிய***

பாஷைகளிலுள்ள இன்பரச நூல்களின் கொள்கைகளும், இன்ப வாழ்க்கையின் இரகசிய முறைகளும், அவற்றிற்குப் பொருத்தமான மனத்தையும் கண்ணையும் கவரும் ஆப்டோன் படங்களும், லயன் பிளாக்குகளும், இன்னும் இல்வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாகிய அநேகம் விஷயங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதனை வாங்கிப்படிப்போர் உண்மைக் காதல் என்பது இன்னதென்பதையும், இன்னவிதமானவர்களை மணம் புரிந்தால் தான் இன்பம் ஏற்படுமென்பதையும், இல்வாழ்க்கையில் இன்னவித மனக்கிரமங்களை அனுசரித்தால்தான் அளவற்ற ஆனந்தமுற்ற அழகிய சந்ததிகளைப் பெற்று ஜீவித்திருக்கலா மென்பதையும் உணர்ந்து இவ்வுலகத்தில் அடைய வேண்டிய இன்பத்தையும், வறுமை இன்பதலையும் அடைவார்கள். இதனை ஒவ்வொரு குடும்பத்தினரும் வாங்கி வாசிக்கலாம.

ஷி தெலுங்கு பதிப்பு விலை ரூபா 2.

ஸ்ரீ மத்

# விவேகானந்த சுவாமிகள்

## விரிவான திவ்ய சரித்திரம்

**(2-ம் பதிப்பு) இதன் விலை ரூ 4.**

**ஆனந்தபோதினி சந்தாதாரர்களுக்கு விலை ரூ. 3.**

சுவாமிகளின் அதியற்புதமான சரித்திரமும், அரிய உபதேசங்களும் அனுபவசாரமான கடிதங்களும், மேலான பிரசங்கங்களும் இடையிடையே விளங்குகின்றன. சுவாமிகள் அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய பிரதேசங்களில் பிரசஞ்சாரம் செய்து வேதாந்த விஷயங்களை விரிவாக உபன்யசித்து ஹிந்து மதத்தை நிலைநாட்டியது இதில் விரிவாக எழுதப்பட்டிருக்கிறது. இவ்வளவு விரிவான சரித்திரம் இதுவரை எவராலும் வெளியிடப்படவில்லை.

## ஆக்ட் புஸ்தகங்கள்

| | ரூ. | அ. |
|---|---|---|
| இந்தியன் பினல் கோட் சட்டம் | 3 | 0 |
| கிரிமினல் லா | 3 | 0 |
| சிவில் லா | 3 | 0 |
| புதுவிவகார சிந்தாமணி | 2 | 8 |
| புதிய ஹிந்து லா | 2 | 0 |
| முகம்மதியன் லா | 2 | 0 |
| லோகல் போர்ட் ஆக்ட் | 2 | 0 |
| கிராம முன்சிப் சட்டம் | 1 | 8 |
| பஞ்சாயத்து சட்டம் | 1 | 4 |
| எஸ்டேட் லாண்டு ஆக்ட் | 1 | 4 |
| சர்ண்ம் டெக்ஸ்ட் | 1 | 4 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| பாம்பரை கிராம உத்தி யோகஸ்தர்கள் சட்டம் | 1 | 0 |
| இந்துதேச சாட்சி ஆக்ட் | 1 | 0 |
| இன்கம் டாக்ஸ் சட்டம் | 1 | 0 |
| ஸ்டாம்பு ஆக்ட் | 0 | 12 |
| ரெஜிஸ்ட்ரேஷன் ஆக்ட் | 0 | 10 |
| டிரஸ்டிகள் சட்டம் | 0 | 12 |
| கால நிர்ணயச் சட்டம் | 0 | 8 |
| நில ஆக்கிரமிப்பு என்குரோச்மெண்ட் சட்டம் | 0 | 4 |
| கிராமச் சுகாதாரம் | 0 | 2 |

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

# திருவிளையாடற் புராண வசனம்

**64 திருவிளையாடல்களுக்கும் ஐதீகப் படங்கள் உள்ளன.**

**காலிகோ பைண்டு செய்தது விலை ரூ. 2.**

சிவபெருமான், சோமசுந்தரக் கடவுளாக மதுரையம்பதியில் எழுந்தருளி அடியார்கள் உய்யும்பொருட்டு நடத்திக் காட்டிய அற்புதத் திருவிளையாடல்கள் அறுபத்துநான்கும் இதில் அடங்கியிருக்கின்றன. இந்நூல் சிவபெருமானுடைய மகிமைகளைத் தெள்ளிதில் உணர்த்தும். இன்னும் சிவபெருமான் அடியார்க்கெளியன் என்பதையும், அவர் தம்மை நம்பின பக்தர்களை ஆட்கொள்ளுதற்கு எத்தகைய தொழிலையும் புரிந்து அவர்களுக்கு உதவிசெய்வான் என்பதையும், சிவனடியார் சிறப்புகளையும், எல்லோருக்கும் விளக்கமாகத் தெரிவிக்கும்.

# ஞானசெல்வாம்பாள் அல்லது

## இரண்டு சகோதரிகள் (5-பாகங்கள்)

ஞானம்பாள் செல்வாம்பாள் என்ற இரண்டு சகோதரிகளே இந்த நாவலில் கதாநாயகிகள். இந்த கன்னிகைகள் மேலதிகாரமின்றித் தங்கள் பிரியப்படி நடக்குமாறு விடப்பட்டனர். அன்னிய வாலிபரிடம் தாராளமாய்ப் பழக்கப்பட விடப்படுவதே நல்ல நாகரீகமென்று கருதவந்த மூதலிய ஆசாரங்களால் விளையும் தீங்குகள் அனுபவமாய் விளக்கப்பட்டிருக்கின்றன. அதோடு பெரும்பாலான கன்னிகைகள் உலக அனுபவமில்லாத அந்தப் பருவத்தில் தங்களுக்குத் தகுதியான கணவர்களைத் தாங்களே தேர்ந்தறிந்துகொள்ளச் சக்தியற்றவர்களென்பதும், அயோக்கியர்களது வஞ்சக வலையில் அவர்கள் எளிதில் சிக்கிக்கொண்டு தங்கள் வாழ்நாள் முழுவதையும் பெருந்துன்பத்தை யனுபவிக்க நேருமென்பதும் இக்கதையால் நன்கு விளங்கும்.

இக்கதாநாயகிகளின் நடக்கைகளால் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் குணங்களைக் கைவிடாமல் நன்னெறியைக் கடைப்பிடித்தொழுகும் கன்னிகை முடிவில் நல்ல பலன்களையும், மேலான பதவியையும் அடைவாளென்பதும், அற்ப போகங்களிலும் படாடோப வாழ்க்கைகளிலும் இச்சை வைப்பவள் துன்பத்தையே யடைவாளென்பதும் தெளிவாய் நிரூபிக்கப்படுகிறது.

இக்கதையில் சம்பந்தப்பட்ட முக்கியமான ஆடவனாகிய தேவராஜன் என்பவனுடைய சரித்திரத்திலும், கிருஷ்ணராஜன் மச்சநாதன் என்பவர்கள் சரித்திரத்திலும் மிக்க ஆச்சரியமும் மனதை யடியோடு கவர்ந்துகொள்ளத்தக்க அபூர்வ சம்பவங்களும் நிறைந்திருப்பதோடு பல அரிய நீதிகளும் நன்னெறிகளும் அனேகம் பொதிந்து கிடக்கின்றன என்பது வாசிப்போர்க்கு நன்கு புலப்படும். **5-பாகங்கள் விலை 9—10—0**

---

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.**

ஆசிரியரின்றி ஆங்கிலந் தெரிந்து கொள்ளும்

# ஆனந்த ஆங்கில பாஷா போதினி.

(நான்காம் பதிப்பு) விலை ரூபா 2.

ஆனந்தபோதினி சந்தாதாரர்களுக்கு விலை ரூ. 1—8—0.

எம். ஏ., எல். டி. பட்டம் பெற்ற ஆங்கில போதகாசிரியராகிய திருவாளர் எம். ஷண்முகசுந்தர முதலியாரவர்களால் இயற்றப்பெற்ற உயர்ந்த திருத்தங்களோடும், சிறந்த அமைப்புகளோடும், நிறைந்த போதனைகளோடும் இப்பதிப்பு வெளிவந்திருக்கிறது.

**800-பக்கங்களுக்குமேல் திக்கு காகிதத்தில் அச்சிடப்பட்டு சீமை காலிகோ பைண்டு செய்யப்பட்டது**

பற்பல கதைகளும், பாரதக் கதைகளும், ஸ்ரீ கிருஷ்ணர் சரித்திர சுருக்கமும் அடங்கியது. அவற்றிற்குப் பொருத்தமான அழகிற் சிறந்த 16-ஆப்டோன் படங்களுடன் கூடியது.

இக் காலத்தில் இங்கிலீஷ் இராஜ பாஷையாயிருப்பதால் அதை எல்லோரும் கற்றுக்கொள்ள வேண்டியது அவசியமா யிருக்கின்றது. அப்படிப் படிக்காத சிலர், பல சங்கடங்களை அடைகின்றனர். ஆதலின், அத்தலைகயினர் கற்றுக் கொள்வதற் குதவியா யிருக்கும்படி ஆங்கில பாஷையைத் தமிழ் மக்களுக்கு எளிதில் போதிக்கும் அரிய போதமுறை நூலாகிய இது பலர் வேண்டுகோளுக்கிணங்க வெளியிடப் பெற்றிருக்கிறது.




இதனைச் சிரத்தையுடன் படிப்பவர் பணச் செலவில்லாமலும், வேறெவ்விதக் கஷ்டமில்லாமலும் மிக எளிதில் இங்கிலீஷ் பேசவும் படிக்கவும் எழுதவும் கற்றுக் கொள்ளலாம். ஆயிரக்கணக்கான பணச் செலவு செய்து 10 வருஷம் படிப்பதனால் எவ்வளவு ஆங்கில தேர்ச்சி யுண்டாகுமோ அவ்வளவு தேர்ச்சியை ஒரு மாதம் அல்லது 40-நாளில் இப் புத்தகத்தின் உதவியைக் கொண்டு அடைந்து, ஆங்கிலத்தை அதி விரைவில் படித்துக் கொள்ளலாம் இதில் சுலபமாக இங்கிலீஷ் கற்றுக்கொள்ளத்தக்க மார்க்கங்கள் விளக்கப்பெற்றிருக்கின்றன.

இதில் இதுவரை வெளிவராத நூதன பாட முறைகளெல்லாம் வெளியிடப்பட்டிருக்கின்றன. இன்னும் ஒரு ரூபா முதல் 10 ஆயிரம் ரூபாவரை சம்பளப்பட்டிக் கணக்கு, வட்டிக் கணக்கு, ஒவ்வொரு தேசத்திலும் ஏற்படும் மணி வித்தியாசம், அன்னிய தேச நாணய மதிப்பு முதலியனவெல்லாம் தெளிவாக விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது.

மேற்படி தெலுங்கு பதிப்பு விலை ரூபா 2.

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

# ரூ. 50,000 பெறுமானமுள்ள நகைகள் கொடுத்தாய்விட்டது




"அமெரிக்கன் ந்யூ கோல்ட்" உலகத்திலேயே எட்டாவது அதிசயம் என்று சொன்னால் மிகையாகாது. அதன் உயர்வு அனைவரும் அறிந்ததே. இந்தியா வெங்கும், பத்திரிகைகளாலும் பொது ஜனங்களாலும் 'என்றுமே கருக்காத கெமிகல் கோல்ட் இது ஒன்றே' என்று ஒரு முகமாகப் புகழப்படுவது. இதிலிருந்து அதி நுட்பமானதும் நாகரீகமானதுமுள்ள விதவிதமான ஆபரணங்கள் தயாரிக்கலாம்.

எங்களுடைய "அமெரிக்கன் ந்யூ கோல்"டை இன்னும் பிரபலமாக்குவதற்காக இப்பொழுதே எழுதுபவர்களுக்கு கீழ்கண்ட சாம்பிள்கள் அடங்கிய செட்டை விநியோகிக்கத் தீர்மானித்திருக்கிறோம்: 6 தோலா அமெரிக்கன் ந்யூ கோல்ட், 2 ஜதை வளையல்கள், 2 ஜதை கம்மல்கள், 2 மோதிரம், எல்லாம் அழகிய வேலைப்பாடமைந்தவை. இதுடன் சித்திரங்களுடன் கூடிய கேடலாக்.

**American New Gold Co., (S. O K.) P.B. No 61, Lahore (India)**



# மூவர் அடங்கன் முறை

திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் மூவரும் பாடிய தேவாரங்கள் முழுமையும் அடங்கிய பெரிய புத்தகம். காலிகோ பைண்டு செய்தது விலை ரூபா 5.

இவ்வருமையான புத்தகம் ஒவ்வொரு சைவர் வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டிய தொன்று. இவ் வடங்கன்முறையின் அருமையும் அளவிடுதற்கரியது. இதனை ஒவ்வொருவரும் அன்புடன் விதிப்படி சிரத்தையோடு பாராயணம் பண்ணி வருவாராயின் இஷ்டகாமியார்த்தங்களை எளிதில் அடையக்கூடு மென்பது பெரியோர் துணிபு.

பிறவிப் பெருங்கடல் நீந்துதற்கு ஓர் அரும்பெருந் தெப்பமாயும் சைவ சமயத்தோர்க்கோர் திலகமாய் விளங்கும் இத்தகைய அரிய பெரிய நூலை அச்சிடாது வாளாவிருத்தல் சைவ சமயத்தினருக்கு மிகவும் இழிவைத் தருமென்று கருதி அதிகச் செலவிட்டு ராயல் 8 பேஜ் சைசில் புதிய எழுத்துக்களில் சரித்திரக் குறிப்பு, ஸ்தலக் குறிப்பு, இராகம் முதலியன பிரித்து உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அழகாக அச்சிட்டிருக்கிறோம்.

ஸ்ரீமத் அருணகிரிநாதர் அருளிய திருவகுப்பு விரிவான உரையுடன்
விலை அணா 8.

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்

# இரத்தினபுரி இரகசியம்

## ஓர் மகா அற்புதமான புதிய நாவல் (9-பாகங்கள்).

இது நாவல் எழுதுவதில் ஒப்புயர்வற்றவரென்று உலகப் பிரசித்தி பெற்ற G W. M. ரெய்னால்ட்ஸ் என்பவரால் வரையப்பெற்ற அதியற்புதமான நாவல்களில் முதன்மைபெற்ற நாவலின் மொழிபெயர்ப்பு. இது காறும் ஒருவராலும் தமிழில் எழுதப்படாதது. தற்காலத்தில் தமிழ் நாவல்கள் எழுதுவதில் பிரக்யாதிபெற்றவரும் தமிழில் அநேக நாவல்கள் மொழி பெயர்த்தெழுதியவருமாகிய ஸ்ரீமான் ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியது.

அந்த நாவலில்தான் கிரந்தகர்த்தா தமது இணையற்ற சாமர்த்திய முழுவதும் வெளியிட்டிருக்கிறார் என்பது ஆங்கிலத்தில் அவர் நாவல்களை வாசித்த யாவரும் அறிந்ததோருண்மையாகும். இதில், வேறு எக் கதைகளிலும் நாம் கேட்டிராத அற்புதங்களும் நெஞ்சு திடுக்கிட்டுத் திகைக்கக் கூடிய சூட்சிகளும் நிறைந்திருப்பதோடு, ஆடவர்களின் பலபேதமான நடவடிக்கைகளும், அவற்றாலடையும் பலன்களும், ஸ்திரீகளின் குணபேதங்களும், கற்புடைய ஸ்திரீகள் தங்கள் கற்பைக் காக்கும் விஷயத்தில் உபயோகிக்கும் துணிகரமான வீரதீர சாமர்த்தியச் செயல்களும் தெளிவாய் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இன்னும் தற்கால நாகரீகத்தை யொட்டி நமது நாட்டாருக்கு இன்னின்ன ஆசாரங்கள் நன்மைபயக்குமென்றும், இன்னின்ன ஆசாரங்கள் தீமை பயக்குமென்றும், நமது மாதர் கடைப்பிடிக்க வேண்டிய ஆசார வொழுக்கங்கள் இன்னின்னவை யென்றும் அந்தந்தச் சமயங்களில் மனதிற் றரிக்கும் வண்ணம் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இது ஆதிமுதல் அந்தம்வரையில் மனதை முழுதும் கவரக்கூடியதென்பது கூறாமலே விளங்கும்.

| | | | |
|---|---|---|---|
| முதல் இரண்டு பாகங்கள் | விலை | ரூபா | 4—0—0 |
| 3-முதல் 6-வரை 4 பாகங்கள் | ,, | ,, | 7-10—0 |
| 7-ம் பாகம் | ,, | ,, | 2—4—0 |
| 8-ம் பாகம் | ,, | ,, | 2—4—0 |
| 9-ம் பாகம் | ,, | ,, | 2—0—0 |

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

---

**ரூ 500 பரிசு!** ஸித்த சக்தி கவசம்: இதை உபயோகிக்கும் ஆண், பெண் யாராயினும் சரி, நீங்கள் காதலிக்கும் ஒருவர் எவ்வளவு பராமுகமாய் இருந்தபோதிலும், உண்மையாய் உங்களை நேசிப்பார். வியாபாரம், வியவகாரம், பரீக்ஷையில் ஜெயம், ஆரோக்யம், சுபிக்ஷம் உத்தியோக உயர்வையும் அளித்து, கெட்ட கிரகங்களின் சேஷ்டைகளையும் அடக்கி, விரோதிகளையும் எதிர்கால கஷ்டங்களையும் தடுக்கவல்லது. குழந்தைப் பேறு இல்லாதார் ஆண், பெண் ஆளுக்கொரு கவசம் அணிய வேண்டும். விலை தாமிரம் ரூ. 1/15. (3க்கு ரூ 5/-) வெள்ளி ரூ. 2/12, தங்கம் ரூ 5/15. ஸ்பெஷல் நெ. 5 ரூ 6/12. தபால் செலவு தனி. இது உண்மையல்லவென்று நிரூபித்தால் ரூ. 500 இனாம். குணமில்லையேல் பணம் வாபஸ்.

**ANAND SWAMI, P. B. No. 61 (A. B. M.) Lahore (India.)**

# மதிமோசன விளக்கம்.

(துசி இராஜகோபால பூபதி அவர்கள் இயற்றியது)

## ஆன்ரோர் மதிக்கும் நான்காம் பதிப்பு.

223-பக்கங்கள் கொண்டது. 16-விநோதமான சித்திரப்படங்கள் சேர்க்கப்பட்டது. உயர்ந்த திக்கு கடிதத்தில் அச்சிடப்பட்டது.

## இதன் விலை ரூபா 1—0—0.

சொற்ப பிரதிகளே கைவசமிருக்கின்றன.
உடனே ஆர்டர் செய்யுங்கள்.

தருமமே தழைத்தோங்கி வளர்ந்துவந்த மகா புண்ணிய பூமியாகிய நம் பரதகண்டத்தில், கலிகாலந் தொடங்கியதிலிருந்து, மனிதர், காலவயப்பட்டு, மனம் மாறுபட்டுத் தருமத்தில் செலுத்தும் சிந்தையை மிகுதியும் அதர்மத்தில் செலுத்தி வருவதால் அறநெறி குறைந்து மறநெறி வளர்ந்து வருகின்றது. அதற்கேற்ப வஞ்சமும், சூதும், பஞ்சமாபாதகமும் அவற்றிற் கஞ்சா நெஞ்சமும் படைத்த மனிதரே நாள்தோறும், நாடுகள்தோறும், ஊர்தோறும், வீடுகள்தோறும் மலிந்து, விநோதம் விநோதமான படுமோசம், மதிமோசம், கிதிமோசங்களையும், சூது வஞ்சனைகளையும் செய்து வருகின்றனர். காலம் செல்லச் செல்ல இதற்குமுன் கண்டும், கேட்டுமிராத எண்ணிறந்த மோசநாசச் செயல்கள் எங்கும், என்றும் நூதனம் நூதனமாகத் தோன்றி அதியற்புதத்துடன் வளர்ந்துகொண்டே வருகின்றன; அவற்றைச் செய்யும் மனிதர்களும் உற்பாத பிண்டங்களாய் ஒருவரை யொருவர் எடுத்து விழுங்குவோராய் அற்புதமாக உற்பவித்து மலையை விழுங்கிய மகாதேவன் போல வளர்ந்து சிறந்து ஜெகஜாலப்புரட்டராயும், அண்டப்புரட்டராயும், நிஷ்ப் புளுகராயும் பரவி வருகின்றனர். இவர்களுடைய மகாமோசச் செயல்களால் சூதுவாதறியாத உலகத்தார் அடையும் கஷ்ட நஷ்டங்களுக்களவேயில்லை. வியாபாரத்தொழில் முழுவதிலும் மோசம்; விவசாயத்திலும் மோசம்; உத்தியோகத் துறைகளிலும் ஒப்பில்லா மோசம்; வித்தையிலும் மோசம்; வேடிக்கையிலும் மோசம்; வைத்தியத்திலும் மோசம்; மாந்திரீகத்திலும் மோசம்; சோதிடத்திலும் மோசம்; சோற்றுக்கடையிலும் மோசம்; கப்பலிலும் மோசம்; ரெயிலிலும் மோசம்; நீதிச்சபைகளிலும் மோசம்; தேசச் சேவைகளிலும் மோசம்; கோவிலிலும் மோசம்; குளத்திலும், வீட்டிலும் மோசம்; காட்டிலும் மோசம்; நாட்டிலும் மோசம்; நகரத்திலும் மோசம் இப்படியே மனிதர் தலை நீட்டு மிடங்களெல்லாம் மோசமயமாகவே யிருக்கின்றன. உலகமுழுவதும் இவ்வாறே மோசம் நிறைந்ததா யிருப்பதனாலே வஞ்சகமற்ற மனிதர் துன்பத்திற்குள்ளாகிச் சதா சர்வகாலமும் சஞ்சலப்படுகின்றனர்; இத்தகைய மோசநாச வலையினின்றும் தப்புதற்கு மார்க்கங் காணாதவர்களாய்த் தவிக்கின்றனர். ஆதலின், இந்தப் படுமோசப் பெரும் பாதாளத்தில் மனிதர் வீழ்ந்து மயங்காமல் தப்பித்துய்தற் கேதுவாயிருக்கும்படி, உலகத்தில் உலாவும் எண்ணிறந்த மோசச் செயல்களெல்லாம், இப்புத்தகத்தில் மிக்க விளக்கமாக எழுதப் பெற்றிருக்கின்றன.

---

ஆனந்தபோதினி ஆபீஸ்,
தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.

(ALL RIGHTS RESERVED.)


தொகுதி 27 | விஷு-வஹு பங்குனிமீ கவ | 1942வஹு மார்ச்சுமீ 14உ | பகுதி 9


## கடவுள் வணக்கம்.

கங்கைவார் சடையாய்! கணநாதா!
காலகாலனே! காமனுக்கு அனலே!
பொங்குமா கடல் விடமிடற்றனே!
பூதநாதனே! புண்ணியா! புனிதா!
செங்கண் மால்விடையாய்! தெளிதேனே!
தீர்த்தனே! திருவாவடு துறையுள்
அங்கணனே அஞ்சல் என்று அருளாய்;
யார் எனக்கு உறவு அமரர்கள் ஏறே. (1)

கொதியினால் வருகாளிதன் கோபங்
குறைய ஆடிய கூத்துடையானே!
மதியிலேன் உடம்பில் அடுநோயால்
மயங்கினேன், மணியே! மணவாளா!
விதியினால் இமையோர் தொழுது ஏத்தும்
விகிர்தனே! திருவாவடு துறையுள்
அதிபனே! எனை அஞ்சல் என்று அருளாய்;
யார் எனக்கு உறவு அமரர்கள் ஏறே. (2)

வானநாடனே! வழித்துணை மருந்தே!
மாசிலாமணியே! மறைப் பொருளே!
ஏனமாய் எயிறு ஆமையும் எலும்பும்
ஈடுதாங்கிய மார்புடை யானே!
தேன்நெய் பால்தயிர் ஆட்டு உகந்தானே!
தேவனே! திருவாவடு துறையுள்
ஆனையே! எனை அஞ்சல் என்று அருளாய்;
யார் எனக்கு உறவு அமரர்கள் ஏறே. (3)

# அரும்பொருள் விளக்கம்

(இ-ள்.) [illegible]காதேவி விளங்கும் சடாதரனே! கணங்களின் தலைவா! எழு[illegible] [illegible]னுய்த் தோற்றமளிப்பவனே! மன்மதனுக்குத் தீப்பிழம்பாய்க் [illegible] யளிப்பவனே! பொங்கிவரும் கடலினின்றும் எழுந்த நஞ்சைக் கண்டத்தில் தாங்கிய நீலகண்டனே! பூதநாயகா! புண்ணியனே! பரிசுத்த மூர்த்தி! செந்தாமரை போன்ற கண்களையுடைய திருமாலை இடப வூர்தி யாகக் கொண்டவனே! தெளிந்த இனிய தேன்போன்றவனே! தீர்த்தனே! திருவாவடுதுறை என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கும் அழகிய முக்கண் மூர்த்தியே! அடியேனை அஞ்சேல் என்று ஆட்கொண்டு அருளுவாயாக! தேவதேவா! எனக்கு யார் உறவு? (எ-று.)

(இ-ள்.) காளிதேவிக்கு உண்டான பெருங்கோபங் குறையும்படியாக நடனமாடிய நடராஜப் பெருமானே! அறிவில்லாதவனுகிய நான் உடம்பை வாட்டும் நோயால் மயங்கி விட்டேன். மாமணியே! மணவாளா! விதிப்படி தேவர்கள் வணங்கிப் போற்றும் விகிர்தனே! திருவாவடுதுறை என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள அதிபனே! அடியேனை அஞ்சேல் என்று ஆட்கொண்டு அருளுவாயாக. தேவாதி தேவனே! எனக்கு உறவு யார்? (எ-று.)

(இ-ள்.) மேலுலக மன்னனே! வழிக்குத் துணையாக இருக்கும் மருந்தே! மாசு சிறிது மில்லாத மாணிக்கமணியே! வேத விழுப் பொருளே! பன்றிப்பல்லும், ஆமையும், எலும்பும் ஆகியவைகளை மாலையாகத் தரித்துள்ள மார்புடைய மதிபனே! தேன், நெய், பால், தயிர் ஆகியவைகளால் அபிஷேகஞ் செய்யப்படும் தெய்வமே! உலக மனைத்தும் வணங்கும் தேவனே! திருவாவடுதுறை என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கும் ஆனையே! அடியேனை அஞ்சேல் என்று ஆட்கொண்டு அருள்வாயாக. தேவதேவனே! எனக்கு உறவு யார்? (எ-று.)

சர்வ லோகங்களுக்கும் தலைவனுகிய பரம்பொருளே எல்லா உயிர்களையுந் தாங்கும் ஆற்றல் வாய்ந்தவனுதலாலும், அவனே உயிர்களுக்கெல்லாம் அம்மையப்பனு யிருப்பதாலும், 'எனை அஞ்சல் என்று அருளாய்; யார் எனக்கு உறவு' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் முறையிடலானுர். இதிலிருந்து தாய், தந்தை, மனைவி உட்பட யாரும் நமக்கு உற்ற உறவில்லை என்று ஏற்படுகின்றதன்றே! (3)




# நெருக்கடியிலும் நிற பேதமா?

இன்று உலகம் உள்ள நிலை விவரிக்க முடியாத கொடுமை நிறைந்ததா யிருக்கிறது. பெருமிதங் கொண்டிருந்த சாம்ராஜ்யங்களெல்லாம் நம் கண்முன் தவிடு பொடியாகி வருகின்றன. பெரிய ராஜ்யங்களெல்லாம் குலைந்து வருகின்றன. அடுத்த ஆறு மாதங்களிலேலா அல்லது ஒரு வருஷத்திலேலா என்ன ஆகுமோ; யாருக்குந் தெரியாது. இந்த யுத்தம் எப்பொழுது முடியுமென்றும் சொல்ல முடியாது. முடியுமோ முடியாதோ! அதுவுந் தெரியாது. உலக நிலைமை எப்படி யிருந்தாலுஞ் சரி; அந்த நிலைமையிலிருந்து யாரும் தப்ப முடியாது.

இப்பொழுதோ யுத்தம் நிச்சயமாக இந்தியாவை நெருங்கி விட்டது. தூரக் கிழக்குத் திசையில் பெரிய பாதுகாப்பு அரணாக இருந்த சிங்கப்பூர் வீழ்ந்து விட்டது. மலேயா, டச்சு கிழக்கிந்தியத் தீவுகளான ஜாவா முதலியவை ஜப்பானியர் ஆக்ரமிப்புக்கு ஆளாய் விட்டது. பர்மாவையும் வசப்படுத்தி விட்டதாக ஜப்பானியர் பெருமை பீற்றிக் கொள்கின்றனர். அந்தமான் தீவையும் கைப்பற்றி விட்டதாகக் கூறப்படுகிறது. அத் தீவிலிருந்து நம் சென்னைமா நகர்க்கு 800 மைல் தூரந்தா னிருக்கிறது. பர்மாவும் துரதிர்ஷ்டவசமாக எதிரி வசமாய் விட்டதால், இந்தியாவுக்கு யுத்தம் வந்தே விட்டது என்று சொல்லவேண்டும் என விஷய முணர்ந்தவர்கள் கூறி வருகின்றனர். ஆகவே, சிங்கப்பூர் வீழ்ந்தபோதே ஜப்பானின் அடுத்த பாய்ச்சல் இந்தியா மீது தான் இருக்குமென்று ஜனங்கள் நடுங்கலாயினர். இந்நிலையிலும், அப்பக்கம் ஜாவாவும், இப்பக்கம் பர்மாவும் அந்தமானும் ஜப்பானின் ஆக்ரமிப்பில் போய்விட்டதென்றால், இந்தியாவை யுத்தம் அணுகி விட்டதென்பதில் சந்தேகமென்ன? ஆகவே, அடுத்த சில நாட்களுக்குள் நம் நாட்டில் பயங்கர நிகழ்ச்சிகளும் கஷ்டங்களும் ஏற்படக் கூடும். ஏற்கனவே, பிற இடங்களில்

நடந்து வரும் நிகழ்ச்சிகள் நம் நாட்டின் நிலைமையை மிகவும் பாதித்து வருகின்றன. ஆகவே, ஜனங்கள் உண்மை நிலையை உணரவேண்டும்.

தூரக் கிழக்குத்திசையில் ஜப்பான் செய்துவரும் அட்டகாசத்தால் நம் இந்திய தேசம் இவ்விதம் அல்லலும் பீதியும் பட்டு வருகையில், ஐரோப்பாவில் ஜெர்மனியின் தாக்குதலையும் சமாளித்துக் கொண்டு, தூரக் கிழக்குத்திசையில் ஜப்பானின் விஷமத்தையும் அடக்க நடவடிக்கை யெடுத்துவரும் இங்கிலாந்து தேசத்தின் நெருக்கடியான நிலைமை எத்தகையதாக இருக்குமென்று நாம் சொல்ல வேண்டியதில்லை. இங்ஙனம் பெரிய யுத்த நெருக்கடியால் பிரிட்டன் கஷ்ட நஷ்டங்களை யநுபவித்து வரும் இந் நிலையிலும், பொதுவாக பிரிட்டிஷ் மக்கள் நல்லறிவு பெற்றதாகத் தெரியவில்லை. அவர்களிட மிருந்த நிறத்திமிர் மறைந்ததாகவுந் தெரியவில்லை.

சென்ற வாரத்தில் புதிய டில்லியில் இந்திய வியாபார சம்மேளனத்தின் சார்பாக நடந்த ஒரு கூட்டத்தில், சிங்கப்பூர் இந்திய வியாபார சபையின் தலைவரான ஸ்ரீ ஜம்னுபாய் செய்த பிரசங்கத்திலிருந்து கிடைத்த சில விவரங்கள் நம் மனதைப் பெரிதும் புண்படுத்தி யிருக்கிறது. ஸ்ரீ ஜம்னுபாய் மலேயாவில் 27 ஆண்டுகள் வாழ்ந்தவர். அவர் மலேயா எதிரி வசமான பிறகு இந்தியாவுக்குத் திரும்பி யிருக்கிறார். ஜப்பானியர் ஆக்கிரமிப்புக்குப் பிறகு அக் காலனியை விட்டுக் கட்டாயமாக வெளியேற்றப்பட்ட இந்தியர் பட்ட அவதியைக் குறித்து அவர் கூறிய செய்திகள் உள்ளத்தை உருக்கக் கூடியதாக இருக்கிறது. "இந்தியர்கள் உதவி வேண்டுமென்று அனுப்பிய 'கேபிள்'களைப் பெற்றுக் கொண்டதாகக் கூட இந்திய சர்க்கார் பதில் அனுப்பவில்லை. வெளியேற்றிக்கொண்டு வரப்பட்ட இந்தியர்களின் சொந்தச் செலவில் சில நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. அவ்விதம் இந்தியர்களை ஏற்றிக்கொண்டு வந்த ஒரு கப்பல் படேவியா என்னுமிடத்தை யடைந்தது. ஆனால், அங்கிருந்த பிரிட்டிஷ் ஸ்தானீகர், கப்பலில் ஒரு ஐரோப்பியரைத் தவிர, மற்றவர்களெல்லாம் இந்தியர்களாய் இருப்பதைக் கண்டதும், பிரயாணிகளின் சௌகரியத்துக்குத் தாம் ஏதும் செய்யவேண்டிய அவசியமில்லை என முடிவு செய்துவிட்டார். துறைமுகத்தி லிருந்த டெலிபோனை உபயோகிக்கக் கூட அனுமதி கிடைக்கவில்லை."

இலங்கையிலும் வரவேற்பு இப்படித்தா னிருந்ததாகத் தெரிகிறது. ஸ்ரீ ஜம்னுபாய் செய்த பிரசங்கத்தில் நிற பேதத்தைப் பற்றிய புகாரே நிறைந்திருந்தது. பிரிட்டிஷ் ஸ்தானீகர்

காட்டிய நிறத் திமிர் ஒருபுறம் இருக்கட்டும். இந்திய சர்க்காரிட மும் இத்தகைய விபரீத மனோபாவம் காணப்பட்டது என்பதை அறியும்போது தான் நமக்கு அளவிலா வருத்த முண்டாகிறது.

நிறத்திமிர் காட்டுவது வெள்ளையருக்கே வாய்த்த பிறவிக் குணம் போலும்! இந்தியர்களுக்குச் சுதந்திரம்-அரசியல் உரிமை —வழங்குவது பற்றித் தான் பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் சிறிதும் இடங்கொடாது பிடிவாதங் காட்டி வருகிற தென்றால், அவர்களது ஆளுகையின் கீழ் இருக்கும் பிரஜைகள் என்ற முறையில் செய்ய வேண்டிய சௌகரியங்களைக் கூடச் செய்யாது நிற பேத உணர்ச்சி காரணமாக பாரபட்சமாக நடந்து வருவது சகிக்கக் கூடாத அநியாயமாகும். அதிலும், மிக நெருக்கடியான இச் சமயத்தில் நிறத் திமிரோடு நடந்து கொள்வது மன்னிக்க முடியாத கொடுமையாகும். யுத்த விபத்துக்காளாகிச் சொத்து சுதந்திரங்களை யெல்லாம் இழந்து, தாங்கள் வாழ்ந்த நாட்டை விட்டு உயிரைக் காப்பாற்றிக் கொள்ள ஓடி வரும் மக்களிடம் நிற உணர்ச்சி காட்டி அநியாயமாக நடந்து கொள்வது தெய்வத் துக்கே பொறுக்காது

கப்பலில் இந்தியர்களுக்குச் சௌகரியஞ் செய்து கொடுக்க மறுத்த ஸ்தானீகர் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தைச் சேர்ந்த வர். 'தங்களுக்கு ஒரு நியாயம், அயலார்க்கு ஒரு நியாயம்' என்று கூறுங் கூட்டத்தைச் சேர்ந்தவர்; உலகிலுள்ள தேசங்களின் சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையுங் காப்பாற்றுவதற்குத் தான் யுத்தம் புரிவதாகக் கூறி, அதே சமயத்தில் இந்தியாவுக்கு மட்டும் உண்மையான ஜனநாயகத்தையும் சுதந்திரத்தையும் வழங்க மறுக்கும் கோஷ்டியைச் சேர்ந்தவர். 'உலகம் என்றால் ஐரோப்பாதான்; மக்கள் என்றால் ஐரோப்பிய மக்கள்தான். சுதந்திரமும் சகல சுகபோகங்களும் சௌகரியங்களும் நன்மைகளும் தாங்களே அநுபவிக்கத் தகுந்தவர்கள்' என்ற எண்ணத்தில் பழுத்த பிரிட்டிஷ் பரம்பரையைச் சேர்ந்தவர். ஆகவே, அந்த ஸ்தானீகர் நிறத் திமிரால் இந்தியப் பிரயாணிகளுக்குச் சௌகரியஞ் செய்து கொடுக்க மறுத்து விட்டதில் ஆச்சரியமில்லை. ஆனால், இந்தியர் நலனைக் காப்பதற்காகவே இருப்பதாகக் கூறி, இந்திய அரசியலை நிர்வகித்து வரும் இந்திய சர்க்காரும் மலேயா இந்தியர் கோரிய உதவிக்குச் செவிசாய்க்காது பராமுகமா யிருந்தது ஏன்? இந்திய சர்க்கார் ஸ்ரீ ஜம்னுபாய் கூறி யிருக்கும் புகார்களுக்கு என்ன பதில் சொல்லப் போகிறார்கள்? என்று கேட்கிறோம்.

---

# சீனாவை ஒன்றுபடுத்திய ஒப்பற்ற வீரர்

(டபிள்யு. ரோட்ஸ் பார்மர்.)

மார்ஷல் சியாங்கே ஷேக்கை நான் பார்ப்பதற்காக இருந்த ஒரு மணி நேரத்திக்கு முன்னால் ஜப்பானிய வெடிவிமானங்கள் அவர் இருந்த இடத்தின்மீது வெடிகுண்டுகளைப் போட்டனர். புதிய சீனாவின் பிரதிநிதியான சியாங்கே-ஷேக் இருக்குமிட மெல்லாம் ஜப்பானிய வெடிகுண்டுகளுக்கு இலக்காவது ஆச்சரியமில்லை.

சரியாக மணி எட்டடித்ததும், கதவு திறந்தது. உள்ளே சியாங்கே-ஷேக் சிப்பாயைப்போல் விறைப்பாக நின்றுகொண்டிருந்தார். மெலிந்த உடல், அழகிய வதனம், இரும்பைப் போன்ற கைகள், ஊடுருவிப் பார்க்கும் கண்கள். அவர் இருந்த மாதிரியிலிருந்து சற்று நேரத்துக்கு முன்னால் அவர் இருந்த இடத்தில் வெடிகுண்டுகள் விழுந்ததாகவே தெரியவில்லை.

நான் அவரைச் சந்தித்தது ஹூசாங்கிலாகும். இதற்கு முன்னால் நான் அவரைப் பார்த்தது கிடையாது. அத்தனைக்கும் யாங்ட்ஸி நதியின் அக்கரையில் உள்ள ஹாங்காவில்தான் நான் இருந்தேன். அங்கு சியாங்கே-ஷேக் வருவது உண்டு. அவரைப் பார்ப்பதற்காக ஜனங்கள் வழி நெடுகவும் திரள் திரளாகக் கூடுவார்கள். ஆனால் சியாங்கே-ஷேக் வேறு வழியாகப் போய்விடுவார்.

ஒரு தடவை அவர் போர்முனைக்குப் பறந்து சென்றபோது அவர் கூடவந்த 6 விமானங்கள் 12 ஜப்பானிய விமானங்களை எதிர்க்கவேண்டி வந்தன. ஆகவே பாதுகாப்பின்றியே அவர் விமானம் வேகமாய்ப் பறந்து சென்றுவிட்டது. இம் மாதிரி தனியாக வேறு யாரும் போர்முனைக்குப் பறந்து செல்வார்களா என்பது சந்தேகந்தான்.

## உலகின் ஐந்தில் ஒரு பங்கு மக்களுக்கு அதிபதி

54 வயது உள்ள சியாங்கே-ஷேக் உலகின் ஐந்தில் ஒரு பங்கு மக்களுக்கு அதிபதி. இருந்தாலும் அவர்களுக்கும் இவருக்கும் நேர்முகமாக தொடர்பு கிடையாது. இவர் கூட்டங்களுக்கு முக்கியமான வெகு சிலரே வருவர். அதிலும் ஐந்தில் ஒரு பங்கினர்தான் இவர் பிரசங்கங்களை வாசிப்பர். ஆனால் எப்படியோ பல்வேறாகப் பிரிந்து கிடந்த சீனாவை இவர் ஒன்றுபடுத்தி ஒரே தேசியக் கொடியை வணங்கும்படி செய்துவிட்டார். சீன சரித்திரத்தில், சென்ற நாலாயிரம் வருஷங்களில் இவரைப்போல் வேறு யாரும் இத்தகைய அரும் பெரும் காரியத்தைச் சாதித்ததில்லை. சீனாவின் ஏழு பாதகங்களான சோம்பேறித்தனம், மன உறுதி யின்மை, சிவப்பு நாடா அமுல், லஞ்சம் வாங்குதல், ஊழல், பொறுப்பைத் தள்ளி விடுதல், பிசகு செய்தல் ஆகிய இவற்றுடன் இவர் கடும்போர் நிகழ்த்திக் கொண்டிருக்கிறார். தேசத்துக்கு யாராவது தீங்கு விளைத்தால் இவர் சற்றுக் கூடப் பொறுக்கமாட்டார். 1938-ல் தம் "இரத்த" சகோதரர்களில் ஒருவர் தவறுதலாக, ஜப்பானியர் 40 மைலுக்கு அப்பால் மடக்கப்பட்டிருக்கையில் சங்ஷாவை கொளுத்தும்படி உத்தரவு கொடுத்ததற்காக, சியாங் அவரைத் தயாதாட்சண்யமில்லாமல் சுட்டுக் கொல்லும்படி உத்தரவு அளித்துவிட்டார்.

## அவர் மேதை

ஜப்பானுடன் அவர் தொடுத்துக்கொண்டிருக்கும் போரில் அவருடைய மேதை நன்கு விளங்குகிறது. இந்தக் காரியத்துக்கு எவ்வளவோ கெட்டிக்காரத்தனம் வேண்டும். அடிக்கடி மாறும் எத்தனையோ வித சந்தர்ப்பங்களுக் கேற்றாற்போல் நடந்துகொள்ளத் தெரியவேண்டும். கடைசிவரை போரிடப் போகிறோம். என்ன வந்தாலும் சரி, போரிடுவதை நடுவில் நிறுத்தமாட்டோம்" என்று அவர் சீனாவை 7-7-37-ல் போருக்கு முடுக்கினார். ஜப்பானியர் வடசீனாவில் ஷாங்காயைத் தாக்கியபோது அவரிடம் 5 லட்சம் துருப்புகளும் 200 விமானங்களும்தான் இருந்தன.

மூன்று மாதத்துக்குமேல் சீனா தாங்காது என்று வெளிநாட்டார் கூறினர். அதற்காகவே, சியாங் ஷாங்காயை மூன்று மாதங்களுக்கு விடாமல் காப்பாற்றிக் காட்டினார். பிறகு ஜப்பானியர் நான்கிங்கைப் பிடித்துக் கொண்டு ஒரு மாதத்துக்குக் கூத்தடித்துக்கொண் டிருந்தார்கள். அந்த சமயம் பார்த்து அவர் தம் சேனையைச் சீர்ப்படுத்திக்கொண்டு, காலம் தாழ்த்துவதற்காக எதிரியை உள்ளே இழுக்கும் முறையைக் கையாள ஆரம்பித்தார். ஜப்பானியர் வருவதற்கு முன்னால் பூமி "அக்னிக்கு அர்ப்பணம்" செய்யப்பட்டது. சீன கொரில்லாக்கள் எதிரிகளை ஹிம்சித்தனர்.

## யுத்தத்தின் நான்கு அம்சங்கள்

நான் போன தடவை சங்கிங்குக்குச் சென்றிருந்தபோது மார்ஷல் சியாங்கே ஷேக்குடனும், ஸ்ரீமதி சியாங்கே-ஷேக்குடனும் விருந்துண்டேன். கூட சியாங்கின் ஆலோசகரான டபிள்யு. எச். டோனால்டும் இருந்தார். சியாங் மிகவும் உற்சாகமாகக் காணப்பட்டார். "இனிமேல் ஜப்பானியர் எங்களை வெல்ல முடியாது. தங்கள் ராணுவ பலத்தைக் கொண்டு எவ்வளவு முன்னேற முடியுமோ அவ்வளவு அவர்கள் முன்னேறியாகிவிட்டது. அவ்வளவுதான். இனிமேல் முடியாது" என்று அவர் கூறினார். அவர் தொடர்ந்து சில வார்த்தைகளும் கூறினார்.

"வெளிநாட்டினராகிய நீங்கள் யுத்தத்தின் ராணுவ பல அம்சத்தை மாத்திரம் கவனிக்கிறீர்களே யொழிய, பாக்கி அம்சங்களைக் கவனிப்பதில்லை. ராணுவ பலத்தைப் போன்ற முக்கியம் வாய்ந்த இன்னும் மூன்று அம்சங்கள் உள்ளன. பொருளாதார முறையில் பார்த்தால் ஜப்பானியரைவிட எங்களால் அதிக காலம் தாக்குப் பிடிக்க முடியும். எங்கள் பொருளாதாரம் அநேகமாய் விவசாயத்தைப் பொறுத்தது. ஜப்பானியருடையதோ கிட்டத்தட்ட முழுவதும் கைத்தொழிலைப் பொறுத்தது. உள்நாட்டில் எங்கள் மக்கள் ஒன்றுபட்டு, உறுதியான சர்க்காரும் பெற்றிருக்கிறார்கள். ஜப்பானிய சர்க்காரோ, இதற்குள் 5 தடவை மாறியாகி விட்டது. சர்வதேசிய நோக்குடன் பார்த்தால் பெரிய வல்லரசுகள் எங்கள் பக்கம் இருக்கின்றன. ஜப்பானை எல்லாரும் சந்தேகிக்கிறார்கள். ஜப்பானுக்கு நண்பர்கள் கிடையாது. ஜப்பான் ஒரு முனையில்தான் தற்காலிகமான வெற்றியடைந்திருக்கிறது. நாங்களோ இதர மூன்று முனைகளில் நிரந்தர வெற்றி அடைந்துவிட்டோம்" என்று அவர் கூறினார்.

சியாங்கே-ஷேக்கின் கூற்று மிகவும் சரியென்பது கடைசியில்தான் தெரியவரும்.

# விஞ்ஞானமா? விளையாட்டா?

(டி. பி. நவநீதகிருஷ்ணன், M. A., அண்ணாமலை சர்வகலாசாலை.)



மின்னணு நுண்காணி (Electron Microscope) என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா? மின்னணு, அணு (Atom) விற்கும் அடிப்படையானது என நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். அதைக் கண்ணால் காண முடியாதென்று விஞ்ஞான வித்தைக்காரர் சொல்லுவார்கள். கண்காணா மின்னணுவை நுண்காணியில் எப்படி உபயோகிக்க முடியும்? என்று நீங்கள் கேட்கலாம்.

அதைப் பற்றித்தான் சொல்லப்போகிறேன். வில்லை (Lens)களால் கண்காணும் ஒளிக் கதிர்களை ஒரே இடத்தில் குவியச் செய்யலாம் என்ற கருத்தையே நுண்காணி அடிப்படையாய்க் கொண்டுள்ளது. மின்னணுக்களை வில்லைகளால் குவியும்படி செய்ய முடியாது. ஆனால் மின்னணுக்களை பாயும் திசையை காந்த மண்டலத்தால் (Magnetic Field) மாற்றலாம். எனவே, அக் காந்த மண்டலத்தின் துணைகொண்டு, மின்னணுக்களை ஓரிடத்தில் குவியுமாறு செய்யலாம். சாதாரண நுண்காணி யொன்றைத் தலைகீழாய்த் திருப்பினால் எப்படி யிருக்குமோ அப்படி யிருக்கும் மின்னணு நுண்காணி. அது ஒரு பெட்டிக்குள்ளிருக்கும். அப் பெட்டியின் உட்புறம் காற் றகற்றப்பட்ட வெற்றிடம் (Vacuum) அதிகமான மின்னழுத்தம் (High Tension) கொண்ட மின்னோட்டம் அதனுள் செலுத்தப்படும். அப்பொழுது மின்னணுக்கள் வெளிப்படும்.

ஒரு சாதாரண நுண்காணியால் பெறும் உருப் பெருக்கத்தைவிட அதிகமான உருப் பெருக்கத்தை மின்னணு நுண்காணி கொண்டு பெறலாம். கண்காண் ஒளியைக் கொண்டு, நுண்காணியால், 20,000 மடங்கான உருப் பெருக்கத்தையும், மின்னணு நுண்காணியினுதவியால் 120,000 மடங்கு உருப் பெருக்கத்தையும் பெறலாம்.

பல நோய்களுக்குக் காரணமான நுண்கூடுகளை (Bacteria) மின்னணு நுண்காணியால் தனித் தனியே காணலாம். அவ் வியாதிகள் பரவாம விருப்பதற்கும், அவை கண்டால் அவற்றை நீக்குவதற்கும் ஏற்றதான வழிகளை மருத்துவ நூல் ஆராய்ச்சியாளர் கண்டுபிடிக்க, அக் கருவி பெரிதும் உதவுகின்றது. மின்னணு நுண்காணி வழியே, கணையாழியிலுள்ள சிறுகல் உலகினளவான தோற்றத்தைப் பெறும்.

மின்னணு நுண்காணியின் உபயோகத்தை எடுத்துக் காட்டியவர் லார்டு ராலே (Lord Rayleigh) என்ற விஞ்ஞானப் பேரறிஞர். அவர் தம்மைத் தாமே 'விளையாட்டு விஞ்ஞானி' என்று அழைத்துக்கொள்கிறார். விளையாட்டாகவே அரும்பெரும் வினைகள் பலவற்றை அவர் ஆற்றியுள்ளார். ஆராய்ச்சி செய்வதற்கு ஊதியம் பெறும் விஞ்ஞானிகளைப் பற்றி அவர் கூறுவதாவது:

"நியூடன் (Newton) என்ற விஞ்ஞான மூதறிஞரே முதன்முதலாய் இங்கிலாந்தில் விஞ்ஞான ஆராய்ச்சி முறையைப் பலர்க்கும் உணர்த்தியவர் எனலாம். அவர் கேம்பிரிட்ஜ் (Cambridge) பல்கலைக் கழகத்தில் போராசிரியரா யிருந்தார். மாணக்கருக்குப் பாடம் கற்பித்தபின் கிடைத்த ஒழிந்த நேரத்தில் அவர் ஆராய்ச்சிகள் செய்தார். அவரை விஞ்ஞானத் தொண்டர் எனலாம்.

"இந் நூற்றாண்டில், விஞ்ஞான ஆராய்ச்சி செய்ய பொருள் பெறுபவர் உளர். அவர்களை விஞ்ஞானப் பணியாளர் எனலாம். அவ்வாறானவர் தொகை அதிகரித்து வருகின்றது. அவர்கள் செயற்கரிய ஆராய்ச்சிகள் செய்து பலபல புதுமைகளைக் கண்டுபிடித்துள்ளனர். எனினும் என்னைப் போன்ற செல்வர் சிலரும் பொழுதுபோக்கிற்காக விஞ்ஞான ஆராய்ச்சிகள் செய்துகொண்டு வருகிறோம்."

லார்டு ராலே பொருள் கருதி விஞ்ஞானத் துறையில் உழைப்பவரன்று. விளையாட்டில் விழைந்தவரின் ஆர்வத்துடன் விஞ்ஞான ஆராய்ச்சி ஆட்டத்தில் திளைக்கும் வாய்ப்பைப் பெற்றவர். இயற்கை வனப்பு மிக்க எஸ்ஸக்ஸ் (Essex) பிரதேசத்தில, இருநூறாண்டுகளாய் விளங்கிவரும் தம் மாளிகையில் சோதனை மன்றமொன்றை யமைத்து, அவர் தம் ஆராய்ச்சிகளைச் செய்துவருகின்றார்.

லார்டு ராலே தமது பாரம்பரையைப் பற்றியும், பழமையினால் மேன்மை பெற்ற தம் வீட்டைப் பற்றியும், எழாயிரம் ஏகரா பரப்புடைய தம் பசும் புலங்களைப் பற்றியும் பெருமை கொண்டவர், அவருடைய ஊர் இப்பொழுது 'டர்லிங்' (Terling) என்று வழங்கிவருகின்றது. முன் நாட்களில் அது, 'டார்லிங்' (Tarling) என்ற பெயர் கொண்டிருந்தது. அப் பெயராலேயே இன்றும் அது குறிப்பிடப் படவேண்டும் என்று அவ்வூர் பஞ்சாயத்தாருக்கு வற்புறுத்தும் முயற்சியில் ராலே இப்பொழுது தம் முழு கவனத்தையுஞ் செலுத்தி வருகிறார்.

இவ் விஞ்ஞானப் பிரபு ஒரு பெருங் குடும்பி. ஒரு மனைவியையும் ஒன்பது மக்களையும் அவர் ஆதரித்து வருகிறார். இவ் வொன்பதின்மர்க்கும் அவர் தந்தையன்று. இப்பொழுதுள்ள மனைவியை அவர் இரண்டாந் தாரமாய் மணந்தனர். அம் மனைவியும் முன்னொருவரை மணந்து, அக் கணவனை யிழந்தபின் ராலேயை மணஞ் செய்துகொண்டனள். அவர் தம் முதல் மனைவி வழியே நான்கு பிள்ளைகளைப் பெற்றார். அவள் தன் முதற் கணவனுடன் வாழ்ந்து நான்கு பிள்ளைகளைப் பெற்றவள். இவ் விருவருக்கும் பிறந்த குழந்தை யொன்று. ஆக ஒன்பது இளமக்கள் ராலே இல்லத்தைச் சிறப்பிக்கின்றனர்.

இவ்வாறு, நல்வாழ்க்கையின் அணிகலன்கள் என அழைக்கப்படும் இளமக்களின் இனிய குரலோசையுடன் நிரம்பிய அவ் வீட்டின் ஒரு புறத்தில் அவரது சோதனை மன்றமுளது. அதைச் சுற்றிலும் நறுமணங் கமழும் மலர்ச் செடிகளுடனும், வானோங்கித் தழைத்த தருக்களுடனும் வனப்புற்ற சோலை யொன்று.

இயற்கையின் அழகு ராலேயின் விஞ்ஞானப் பணியிலும் விரவியுள்ளது. நிறத்தைப் பற்றியும் ஒளியைப் பற்றியும் அவர் அரிய ஆராய்ச்சிகள் செய்துள்ளார். அவற்றைப்பற்றி, பாமரர் உள்ளமும் உவகை யடையுமாறு எடுத்துரைக்கும் சொல்வன்மையையும் பெற்றவர். கண், பல நிறமான ஒளிகளை பிரித்துக் காணும் வன்மையைப் பற்றி அவர் கூறுவதாவது.

"............கண் நிறங்களைக் காணும் திறன் இயற்கையின் அற்புதங்களி லொன்றாம். நம்முடன் நெருங்கியுள்ளவற்றைப்பற்றி நாம் ஊன்றிக் கவனிப்பதில்லை. இதனால் தான், கண்ணின் வன்மையை நினைத்து வியக்காதுள்ளோம். நிறங்களை வேறுபடுத்திக் காண இயலாதவரை, அதாவது, நிறக்குருடரை (Colour blind people) நாம் பரிகசிக்கிறோம். நிறங்களை வேறுபடுத்தும் பகுப்பு வன்மையின் பெருமையை உணராதுள்ளோம்.

"..................பல ஆராய்ச்சிகளினின்று, மூன்று வேற்றுமையான அடிப்படையான நிற உணர்ச்சிகள் உள்ளன எனத் தெரிகின்றது. நமது கண்ணின் புறத்திரை (Retina)யில் கூம்புகள் (Cones) போன்ற அமைப்புகள் உள்ளன. அவையே நிறப்பகுப்பு வன்மைக்குக் காரணமானவை. அங்குள்ள கம்புகள் (Rods) ஒளி உணர்ச்சியை யளிப்பவை. ஆயினும், உடற்கூறு நூலின் (Anatomy) பாற்பட்ட ஆராய்ச்சிகளினின்று மூவகைக் கூம்புகளிடையுள்ள நுண்ணிய அமைப்பு வேற்றுமைகளைக் கண்டு பிடிக்க இயலவில்லை. தவிர, நிறக்குருடரின் கண் செம்மையான கண்ணினின்று என் வேறுபடுகின்றது என்பதற்கும் காரணம் அறியாதுள்ளோம்."

அவர் நிறத்தைப் பற்றியும் ஒளியைப்பற்றியும் செய்த ஆராய்ச்சிகளினின்று பல புதிய விஷயங்களைக் கண்டு பிடித்தார். வானும் கடலும் நீலமாயிருப்பதேன் எனும் வினாவிற்கு விடையளித்தார். வேளைக் கேற்றவாறு சூரியனின் தோற்றமடையும் வேறுபாடுகளை விளக்கினார். இவ்வாறான ஆராய்ச்சிகளின் கண், மின்னணு நுண் காணியின் சிறப்பை அவர் அறிய நேர்ந்தது. அதைச் செம்மைப்படுத்திக் கையாளலானார்.

நியூடன் வெண்ணொளி பலநிற ஒளிகளாலானது எனக் காட்டினார். பல்லாண்டுகளின் பின்னர், ஒளி, நுண் அலைகளாலாயது என்ற ஹியூஜன்ஸ் என்பாரின் கொள்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது. பின் வந்த விஞ்ஞானிகள் பல நிறங்களிடையுள்ள வேற்றுமைகள் அலை நீளங்களை (Wave lengthe)ப் பொறுத்தவை எனத் தெளிவித்தனர். பல அலை நீளங்களை அளக்கும் முறைகளையும் கருவிகளையும் கண்டு பிடித்தனர். கண்காண் ஒளி குறித்த வரம்பினுக்குட்பட்ட அலை நீளங்களைக் கொண்டது என நிலை நாட்டினர். இவ் வெல்லைகளுக் குட்படாது, குறைந்த நீளத்தைக் கொண்ட அலைகள் கட்புலனாகா என்று தெளிகிறோம். அவற்றைத் தக்க முறையில் புலனாக்கவே, மின்னணு நுண்காணி பயன்படுகின்றது அணு, நுண்கூடு, இன்னோரன்னவை கட்புலனொளி அலைகளின் நீளத்தை விடக் குறுகியவை. அவற்றைக் கண்காணொளி கொண்டு என்றும் காண இயலாது. மின்னணு நுண் காணியில், அந் நுண் பொருள்களுக்கும் குறைந்த அளவைக்கொண்ட மின்னணு அலைகள் செல்கின்றன. வில்லைகளின் பணியை காந்த மண்ட

லம் செய்கின்றது. பின் திரை, படம் பதியும் தட்டு (Photographic plate). அத் தட்டு, கண் காணா ஒளி பெறும் மின்னணு படுதலையும் ஏற்று உணருமாறு செய்யப்பட்டுள்ளது. இதனால் நுண் பொருள்களை நேரே காணாவிடினும், அவற்றின் படத்தைக் காணலாம். நியூடன், 'நிறமாலை' (Spectrum) சூட்டினார். பின் வந்தோர் பல புது மலர்களைக் கோத்தனர். விஞ்ஞானம் சிறப்புற்றது.

லார்டு ராலே பேரறிஞர் மரபில் தோன்றியவர். அவர் தந்தை, தம் காலத்தே விஞ்ஞான நிபுணர் எனப் புகழெய்தி, நோபல் பரிசு (Nobel Prize) பெற்றவர். மகன் தந்தைக் கேற்ற தநயன் என்று புகழுடன் திகழ்கின்றார். விஞ்ஞானீயச் சங்கங்கள் யாவற்றிலும் சேர்ந்து, தம் கடனாற்றி வருகின்றார். உயரிய பல கட்டுரைகளை வெளியிட்டுள்ளார்.

“தங்கள் விஞ்ஞான ஆராய்ச்சிகளால் விளைந்த பலன்கள் யாவை?” என்றார், அவரைக் காணச் சென்ற ஒருவர். பிரபுவின் கண்களினின்று தீப்பொறிகள் பறந்தன. மறுமொழி தந்தனர். “விஞ்ஞானி உண்மையைக் காணும் பணியில் ஈடுபட்டவன். ஆராய்ச்சிகளின் விளைவியல் பலன்களைப் பற்றிய கவலை அவனுக்கேன்? அதைக் கருத மற்றோர் இருக்கின்றனர்.”

---

## சந்தா நேயர்களுக்கு

## அறிக்கை

‘ஆனந்தபோதினி’யின் 27-ம் வருட சந்தாவை விஷு வருஷம் ஆனி மாதம் 32-ந்தேதி (15-7-41)க்குள் எமக்கு வந்து சேரும்படி அனுப்பினவர்களுக்கு, 26-ம் தொகுதி 12-ம் பகுதியில் தெரிவித்தபடி சித்திரபானு வருஷத்திய ஆனந்த போதினி சுத்த திருக்கணித பஞ்சாங்கம் 3-3-42-ல் இனாமாகத் தபாலில் அனுப்பப்பட்டது.

பத்திராதிபர்.

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

(சி. பி. ஆனந்தம்.)



## 15. வியாழன்

நமது மண்ணுலகினுக்குப் பலன் நிகழ்த்துவன 'துஜாதி பஞ்சக் கிரகங்கள்' தாம். அவற்றுள், மிகவும் முக்கியமானது 'வியாழன்'. பலன் தரும் கோள்களின் வரிசைக் கண் இது மூன்றாவதாக வருகிறது. இம் முறையில் இது புதனை அடுத்து அமையும். எனினும், சூரியனை நடுவாக்கி அதனைச் சுற்றி ஓடும் கோள்களின் வரிசையில் வியாழன் ஆறாவதாக இருக்கின்றது. ஆனால், செவ்வாய்க்கும் இந்த வியாழனுக்கும் இடையே ஒரு பொழுது துலங்கியிருந்த கோள் ஒன்றையும் சேர்த்துத்தான் அவ்விதம் ஆறாவது வரிசையில் வியாழன் என்று கணக்கிடப் பெறுகின்றது. இதனால் அந்தக் கோள் காட்சிக்குரியதாக வின்றி மறைந்துவிட்டமையின், காட்சிக் குரியனவற்றுள் வியாழன் ஐந்தாவதென்றே கொள்ள வேண்டும். பூமியின் சுற்று வீதிக்கு வெளிப்புறத்தே வியாழனின் சுற்று வீதி மூன்றாவதாக-மறைந்த கோளையும் சேர்த்து நான்காவதாக-அதாவது மறைந்த கோளின் சுற்று வீதிக்கு வெளிப்புறத்து இரண்டாவதாக இருக்கின்றது. சூர்யனிலிருந்து 10,450 லட்சம் மைல்கள் தூரத்தே வியாழ உலகம் இடம் பெறுகின்றது.

இது கோள்கள் யாவற்றினும் மிகப் பெரியது. இதன் குறுக்களவு 82,720 மைல்களாகும். இதன் ஈர்க்கும் சக்தி பூமியினும் இரண்டரை மடங்கு அதிகமாம். பரிமாணத்தில் பூமி அவ்வளவு ஆயிரம் பங்கு பெரியது; எடைக்கனத்தில் முன்னூற்றுப் பதினேழு பங்கு அதிகமானது. இவ்வளவு பெரிய வியாழன் தன்னைத்தான் ஒரு தடவை சுற்றி முடிப்பதற்கு ஒன்பது மணி ஐம்பத்தைந்து நிமிஷங்கள்தான் ஆகிறதாம். அத்தனை விரைவாக அது சுற்றிக்கொள்வதிலிருந்து அதன் வட-தென் துருவ முனைகள் இரண்டிற்குமுள்ள நேர் தூரத்தினும் ஐயாயிரம் மைல்கள் அதிகமாக அதன் சமன் கோட்டிற்கு அருகிருக்கும் குறுக்களவு இருக்கின்றதென கணித வல்லுநர் கண்டிருக்கின்றனர். அதன் துருவ முனைகள் மிகவும் தட்டையாக விருக்குமாம். வியாழன் சூர்யனை ஒரு தடவை சுற்றிவர நம் பூலோகத்தின் கணக்குப்படி பன்னிரண்டு ஆண்டு ஆகின்றது.

இவ்விதம் நிலவுலகைப் போன்ற தன்னைத்தான் சுற்றிக்கொள்ளும் ஒரு கதியும்-சூரியனை வட்டமாக வரும் மற்றொரு கதியும் இருந்தும், வியாழனில் காலக் கூறுபாடுகள் (Seasons) எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை யென்கின்றனர். அதற்குக் காரணம் அதன் துருவ முனையின் சாய்வு (4°) நான்கே டிகிரிகள்தான் இருக்கின்றதாம். பூமிக்குச் சூரியனிடமிருந்து கிடைக்கிற ஒளி-உஷ்ணம் இவற்றில் இருபத்தியேழில் ஒரு

கூறே வியாழனுக்குக் கிடைக்கின்றது. இதனாலும், இதன் பகல்-இரவுகளின் கால அளவுகள் ஏறக்குறைய ஐந்து ஐந்து மணிக் கூறுதான் என்பதனாலும் இரவு-பகல்களின் நிலையில் எவ்வித வேற்றுமையும் இருப்பதற்கில்லையென்று தெரிகின்றது. ஆனால், தன்னைத்தான் சுற்றிவரும் கதி மட்டும் என்னவோ அதிவேகமாகத்தான் இருக்கின்றது. இங்ஙனம் இரவு—பகல்களில் வித்தியாஸ மற்றும், காலக் கூறுபாடுகளுக்கு இடமின்றி சூரிய ஒளி-உஷ்ணம் மிகக் குறைந்தும் இருக்கும் இந்த வியாழ உலகில் ஜீவர்கள் வசிக்கமுடியுமா? முடியவே முடியாதன்றோ! அவ்விதமே நிபுணர்களும் முடிவு கட்டியிருக்கின்றனர். எனினும், இதன் இதர விவரங்களும் கண்டு நாம் முடிவிற்கு வருவோம்.

வியாழனைச் சுற்றிய காற்று மண்டலம் மிகவும் அடர்த்தியானது. அதில் மேகக் கூட்டங்கள் பல அடுக்கு அடுக்காக அதன் சமன் கோட்டிற்கு எதிர்த்திசையில் வளர்ந்த வண்ணமிருக்கின்றன. காற்று மண்டலத்தின்கண் காணப்பெறும் அடையாளங்கள் ஒரு படித்தாயின்றி அடிக்கடி மாறுதல் அடைந்துகொண்டேயிருத்தலின், அதில் சுழல்கள் இருக்கின்றனவென்று நிச்சயிக்கக் கூடியதாம். வியாழனில் ஒரு பொழுது உஷ்ண நிலை மிக அதிகமாக விருந்திருக்குமென்றும்-அது குறைந்துகொண்டு வருவதில், இன்னும் பூமி அவ்வளவு குளிர்ந்துவிட வில்லையென்றும் தெரிகின்றது. இதனாலும் வியாழனில் ஜீவர்களின் வாசம் சாத்தியமில்லையென்று நிரூபணமாகின்றது. பதினேழாவது நூற்றாண்டின் பிற்பகுதியில்—அதாவது கி. பி. 1665-ம் வருஷத்தில் வியாழ மண்டலத்தின்மீது மிகவும் துலக்கமான செந்நிறத்துப் புள்ளி ஒன்று காணப்பட்டதாம். அது பின்னர் காட்சிக்குரியதாக விருக்கவில்லையெனத் தெரிவிக்கப்பட்டது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிக்குச் சிறிது முன் அமெரிக்காவைச் சேர்ந்த வான நூல் அறிஞர் ஒருவர் மற்றொரு புள்ளியைக் கண்டார். அது சற்று வெண்ணிறம் கலந்த சிவப்பாக ஒளி வீசிற்றாம். முப்பதினாயிரம் மைல்கள் நீளமும்-ஏழாயிரம் மைல்கள் அகலமும் கொண்டதாக அதன் அளவை அவர் கணக்கிட்டிருந்தார். இது முந்திய புள்ளியினின்றும் வேறானதா? அன்றி அதுவேதானா என்பது நிரூபிக்க முயற்சி செய்யப்படவில்லையென்று தெரிகிறது. இந்த நூற்றாண்டின் தொடக்கத்து அந்தப் புள்ளி உருவிற் சுருங்கித் துலங்கிற்று. இதுகால், அது மிகவும் சுருங்கி காட்சிக்கே அரியதாய் விட்டதாம். இந்த விவரங்களின்மூலம் வியாழனில் வெப்ப நிலை உன்னதத்திலிருந்து குறைந்துகொண்டே வருகின்றதென்று சொல்லக் கூடியதாம். இவ்விதம் நமது பூமியின் அளவிற்குக் குறைந்துவிடின், ஜீவர்கள் வாசஞ் செய்ய ஏற்படுமாம். வெப்ப நிலை குறைந்துவிடின், தன்னைத்தான் சுற்றும் வேகமும் குறைந்துவிடும் என்றும், துருவ முனையின் சாய்வும் பருவ நிலைகளுக்கு ஏற்றவிதம்-தாழக்கூடுமென்றும் சொல்லுகின்றனர். மேலும், கடந்த மூன்று நூற்றாண்டுகளின் கவனத்திற் கிடைத்த விவரங்களிலிருந்து உஷ்ண மானத்தின் குறைவின் போக்கு இதே வேகத்தில் போய்க் கொண்டிருந்தால், ஜீவர்களின் வாசத்திற்கு ஏற்ற விதம் வியாழன் குளிருவதற்கு இன்னும் ஒன்றரை லட்சம் நூற்றாண்டுகள் பிடிக்குமாம்.

வியாழன் தரும் ஒளியைக் கணக்கிடுகையில், இதர கோள்கள் எல்லாவற்றினும்-ஆனால், வெள்ளியைத் தவிர இதன் ஒளி மிகுத்ததாகும். இதன்

# இசையும் வசையும்

(கனி)

"என்னய்யா பாகவதர்வாள், நேத்து உங்கள் கச்சேரியில் கலாட்டாவாமே."

"ஆமாம் பசங்கள் கூச்சல் அதிகமாப் போச்சு. பாத்தேன். இரண்டு மூன்று நல்ல உருப்படிகளாகப் பாடினேன். அப்புறம் கூச்சலேது ஒண்ணேது. ஒரு பய இருக்கணுமே உள்ளே," என்று பாகவதர் ஒருவர் தன் பிரதாபத்தை நண்பரொருவரிடங் கூறிக்கொண்டிருந்தார்.

இத்தகைய பாகவத சிகாமணிகள் நம் நாட்டில் இப்பொழுது சில இடங்களில் இல்லாமலில்லை. இவர்கள் பாட ஆரம்பித்து விட்டால் கேட்போருக்கு சிறிது சங்கீத ஞானமிருந்தாலும் உருகி விடும். அர்த்தமாகாத பாட்டுக்களைப் பாடி முழுதும் ரசிக்க வொட்டாது செய்வார்கள். தமிழ்ப் பண்களைப் பாடுவார்கள், வார்த்தைகளைப் பிரிக்கக் கூடாத இடங்களில் பிரித்துக் கொலை செய்வார்கள். "தச, ராம, சிரா" என்றிருப்பதை, "தசரா, மசிரா" என்று பிரித்து அந்த 'மசிரா'வின் மேல் ஒரு அழுத்தம் அழுத்துவார்கள். இவர்கள சாரீர இனிமையோ காதைப் பொத்திக் கொண்டு தான் கேட்க வேண்டும்! இத்தகைய பாகவத சிகாமணிகள் முன் காலத்திலும் இருந்திருக்கிறார்கள்.

பல நூற்றாண்டுகளுக்கு முன் தமிழ் இசை வளர்ப்பதில் பேரார்வங் காட்டினன் ஒரு அரசன். அவன் தான் நற்றமிழ் நந்தி அவன் இசைச் செல்வர்க்கு ஆதரவளித்தான். நல்ல தமிழ்ப் பண் இசைப்போர்க்குப் பரிசில்கள் கொடுத்தான். பாட்டு வளர்க்க ஒரு பெரும் மண்டபங் கட்டினன். பெரிய வித்துவான்கள் வந்தால் அங்கு அவர்கள் பாட ஏற்பாடு செய்தான். இத்தகைய பேர் அரங்கின் அருகே ஒரு சில வீடுகளுண்டு.

இந்த வீடுகள் ஒன்றிற்கு ஒரு பாகவதர் வருவார். அந்தக் காலத்தில் பாகவதர்களைப் பாணர்கள் என்று கூப்பிடுவார்கள். இந்த பாகவதருக்குத் தாம் செல்லும் வீட்டில் சிறிது செல்வாக்குண்டு. வீட்டம்மாளை இவருக்கு

---

சமன் கோட்டிற்கு வடக்கிலும்-தெற்கிலும் காணப்பெறும் வளைவுகள் நம் பூலோகக் கணக்குப்படி ஆண்டு பனிரெண்டிற்கு ஒருமுறை நிறத்தில் மாறுதலை அடைகின்றன. அது வடக்கிலும்—தெற்கிலும் ஒரு படித்தாய் எப்பொழுதும் இருப்பதில்லை. பொதுவாக, அதன் நிறம் சிவந்த வண்ணமாகத்தான் தோற்றுகிறது. வடக்கில் அந்தச் சிவப்பு மிகுந்திருந்தால், தெற்கில் அது குறைந்தும்—தெற்கில் மிகுந்திருந்தால் வடக்கில் குறைந்தும் காணப்பெறுகின்றது. இந்த மாறுதல் ஒவ்வொரு வருஷமும் நிகழுகின்றது. சூரியனுக்கும்–வியாழனுக்குமுள்ள இழுப்பாற்றலே அவ்விதமான மாறுதலுக்குள்ள தோற்றத்திற்குக் காரணமென்கின்றனர் நிபுணர்கள்.

(தொடரும்)

னன்ருகத் தெரியும். ஒரு நாள் அந்த வீட்டுக்கு அயலூரிலிருந்து இருவர் வந்திருந்தனர். அங்கே வந்த பாகவதர், அவர்களிருவரும் அந்த வீட்டம்மாளின் தாயும் தங்கையும் என்றும், அவர்கள் சங்கீதத்தில் தேர்ந்தவர்களென்றும் தெரிந்து கொண்டார். அவர்களிடம் தனது சங்கீத ஞானத்தைத் தெரிவிக்க வேண்டுமென்பது அவருடைய அவா. ஆனல் அன்று சந்தர்ப்பமே வாய்க்கவில்லை.

அன்று இரவு ஊரடங்கிய பின் இசை மண்டபத்தில் பாகவதர் நுழைந்தார். அவருடன் அவர் சகாக்கள்—அபிமானிகளுங் கூடத்தான்—சிலரும் சென்றிருந்தனர். பாகவதர் பாட ஆரம்பித்தார். தாம் பாடுவது, பக்கத்தில் உள்ள வீடுகளுக்கு, குறிப்பாகத், தாம் செல்லும் வீட்டில் உள்ளோர் காதுகளுக்கு எட்ட வேண்டு மென்பது அவருடைய எண்ணம். ஆகவே எவ்வளவு சப்தமிட்டுப் பாட முடியுமோ அவ்வளவு சப்தமிட்டுப் பாடினர்.

மறுநாட் காலையில் தாம் எப்பொழுதும் செல்லும் வீட்டுக்குச் சென்ருர். அவருடைய பாட்டை, அதன் இனிமையை, அந்த விருந்தினர்கள் விரும்பி உண்டார்களா என உணர வேண்டுமென்ற ஆவல் அவருக் கதிகம். அங்கு வீட்டம்மாள் மட்டும் காட்சி அளித்தாள். அவரை வரவேற்று 'நேற்று இரவு சேதி கேட்டீர்களா?' என்ருள். 'என்ன?' என்று குதூகலம் பொங்கக் கேட்டார் அவர்.

"பேணி இசை வளர்க்கும் நந்திப் பெம்மான் பேராங்கில்"

என்று அவள் ஆரம்பித்ததும், "சரி, நம் பாட்டைப் பற்றித் தான் சொல்லப் போகிருள்," என்று மகிழ்ச்சி யடைந்தார். அவள் மேலுஞ் சொன்னுள்.

"ஏஞெலி கென்னல் இரவெழலும்" என்று.

"இது நம் பாட்டைப பற்றிய அபிப்பிராயமில்லை. நம் கச்சேரிக் கப்புறம் ஏதோ சத்தம் போட்டிருக்கும் போலே" என்று அவர் நினைத்தார். அவள் பாட்டைத் தொடர்ந்து,

"—பாணகேள்,
பேயென்ருள் அன்னை தான், பேதை
என் தங்கையும் நாயென்ருள்,"

என்று சற்று நிறுத்தினுள். தாம் கடைசியில் நினைத்தது சரிதான் என்று அவர் முடிவு கட்டிக்கொண்டார். ஆனல் அவள் பாட்டை முடித்ததுந்தான் அவருக்குப் பூமி சுற்றலாயிற்று. ஏன், தான் பார்க்கும் பொருள்களெல்லாம், தன் முன்னுல் இருந்த வீட்டம்மாள்கூட சுற்றுவதுபோல் தோன்றிற்று. அத்தகைய முடிவுதான் என்ன? ஒன்றுமில்லை. மூன்று வார்த்தைகளாலாய, "நீ என்றேன் நான்" என்பதுதான் அது. இப்பொழுது பாட்டு முழுவதையும் பாருங்கள்.

"பேணி இசை வளர்க்கும் நந்திப்பெம்மான் பேராங்கில்
ஏஞெலி கென்னல் இரவெழலும்,—பாணகேள்,
பேயென்ருள் அன்னை தான், பேதைஎன் தங்கையும்
நாயென்ருள், நீயென்றேன் நான்."

மேலே கூறியது ஒரு பாகவத சிகாமணியைப்பற்றி. ஒரு 'லேடி பாகவதர்' எப்படிப் பாடினாள் என்பதையும் ஒரு சிறிது பார்த்துவிடுவோம். ஒரு ஊரில் ஒரு கச்சேரிக்கு ஏற்பாடாகி இருந்தது. கச்சேரி செய்யப்போகிறவர் ஒரு பெண்மணி, அதிலும் நாகபட்டினம் கோயில் தாசி என்று கேள்விப்பட்டவுடன் கூட்டம் பிரமாதமாகக் கூடிவிட்டது. எள் போட்டால் எண்ணெயாய்விடும். ஆனால் அவள் ஆள் மட்டுந்தான் அழகா, அவள் பாட்டும் அழகானதா என்பதை அறிந்தவர்கள் மிகச் சிலரே. அவளுடைய கச்சேரியைக் கேட்க அவ்வூரிலிருந்த புலவர் ஒருவரும் சென்றிருந்தார்.

மேடையில் 'சகல கலா விற்பன்ன பாகவதை (?)' வந்தமர்ந்தாள். அப்படியே சபையோர் சொக்கிப் போய்விட்டனர். அவள் பாட ஆரம்பித்தாள். ஒவ்வொருவரும் அவள் குரலினிமைதான் தங்கள் காதில் விழுகிறதா என்று சந்தேகப்பட்டனர். ஆனால் ஒவ்வொருவர் கைகளும் அவர்களை அறியாமலே இருகாதுப் புறமுஞ் சென்றன—காதுகளைப் பொத்திக் கொள்ளத்தான். கச்சேரிக்குச் சென்றிருந்த புலவரால் சகிக்கவே முடியவில்லை. முதலில் எழுந்து வெளியே வந்தவர் அவர்தான். வெளியே ஒருவன் நின்று கொண்டிருந்தான். அவன் கையில் ஒரு கயிறு இருந்தது.

"சாமி, இங்ஙன எப்புடி அது நொளைஞ்சுது?" என்று அவன் அவரிடம் கேட்டான்.

"அதுதாண்டாப்பா ஆச்சரியம். அசலூரோல்லியோ" என்று அவர் பதில் கொடுத்தார்.

"இல்ல சாமி. அது சத்தம் என்னிது மாதிரில்ல கேட்டுது"

"அதென்னப்பா உன்னிது."

"என்ன சாமி, உள்ளா ஊளையிட்டது என் கழுதெ தானே?"

புலவரால் சிரிப்பை அடக்க முடியவில்லை.

"அது உன் கழுதையில்லப்பா. அது நாகபட்டினத்து இரண்டு கால் பெண் கழுதை" என்று கூறிச் சென்றார்.

அவர் கேட்ட பாட்டுக் கச்சேரியையும் அதன்பின் வண்ணானுடன் நடத்திய சம்பாஷணையையும் அவரால் மறக்கவே முடியவில்லை. புலவரல்லவா? ஆகவே அதை ஒரு பாட்டாகப் பாடினார். அந்தப் பாட்டைப் படியுங்கள்.

"வாழ்த்துத் திருநாகை வாகான தேவடியாள்
பாழ்த்த குரல் எடுத்துப் பாடவே—சேற்றுக்
கழுதைகெட்ட வண்ணான் கண்டேன் கண்டேனென்று
பழுதை எடுத்தோடி வந்தான் பார்."

இப்பொழுதும் சில பாகவதர்கள் பாட ஆரம்பித்துவிட்டால் மேலே கண்ட இரண்டு பாட்டுக்களும் நம் மனக் கண்முன் தோன்றுமல்லவா.

---

# அந்தப் பருந்து

(எஸ். சுப்பிரமணியம், எம். ஏ.)

மிஸ் சாந்தகுமாரியும் மிஸ்டர் பாபுவும் வெகுநாளாக அண்டை வீட்டுக்காரர்கள். ஆனால் அவள் பணக்காரி. அவர் ஏழை. அவளோ பெரிய மாளிகையில் வசித்து வந்தாள். பல சேவகர்கள் அவள் கீழ் வேலை செய்து வந்தனர். அவரோ ஒரு சிறிய குடிசையில் கிழத்தாதி யொருத்தியுடன் வசித்து வந்தார்.

ஒருகாலத்தில் அவரும் பணக்காரராகத்தான் இருந்தார். ஆனால் தன் காதலுக் கறிகுறியாக மிஸ் சாந்தகுமாரிக்குப் பல பரிசுகள் அனுப்பி வந்த தன் பயனாக, நாளடைவில் அவர் ஏழ்மைத் தசையை அடைந்து விட்டார். மிஸ் சாந்தகுமாரி அப்பரிசுகளை ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை யானாலும், அவைகளைத் திருப்பியனுப்பப் பயப்பட்டாள் ஏனென்றால் அப்படிச் செய் தால் அவர் மனம் உடைந்துவிடும் என்று அவளுக்குத் தெரியும்.

இப்பொழுதோ மிஸ்டர் பாபுவின் வீட்டில் சாப்பாட்டுக்கே லாட்டரி. சிலநாட்கள் அவரும் கிழத்தாதியும் சாப்பாடே யில்லாமல் காலங் கழிக்க வேண்டி யிருந்தது. அவர் வீட்டில் எல்லாம் போக எஞ்சி நின்றது ஒரே ஒரு பருந்துதான். அது பெரியதாகவும் அழகாகவும் இருந்தது. அதன் மேல் தான் அவர் தன் உயிரையே வைத்திருந்தார். ஆகையால் அதை விட்டுப் பிரிய அவருக்கு மனம் வரவில்லை. சில சமயங்களில் அந்தப் பருந்துதான் வெளியில் சென்று சில பறவைகளைக் கொண்டுவந்து அவ ருக்கு ஆகாரமாகக் கொடுக்கும். இப்படி அவர் சாப்பாட்டுக்குத் திண்டா டிக் கொண்டிருந்த போதிலும் மிஸ் சாந்தகுமாரியின் மீது அவருக்கிருந்த காதல் மாத்திரம் சிறிதும் குறையவில்லை.

மிஸ் சாந்தகுமாரியோ ஒரு விதவை. அவளுக்கு ஒரு சிறுபிள்ளை இருந்தான். அவனுக்கு ஒருநாள் கடும் ஜுரம் கண்டது. நாளாக ஆக, அவன் உடம்பு குன்றிக்கொண்டே வந்தது. இதைக்கண்ட தாயாரின் மனம் தவித்தது. படுக்கையில் கிடந்த குழந்தையிடம் போய், "அப்பா, நான் என்ன செய்தால் உன் உடம்பு சொஸ்தமாகும் சொல்லு. நான் அதைச் செய்கிறேன்," என்று கூறுவாள். அவன், "எனக்கா? எனக்குப் பக்கத்து வீட்டுப் பாபு மாமாவிடம் இருக்கும் பருந்தை வாங்கித்தா. அப்பொழுது எனக்கு உடம்பு சௌகரியமாகி விடும்," என்ற ஒரே பதிலைக் கூறுவான்.

மிஸ் சாந்தகுமாரி என்ன செய்வாள் பாவம்! "அவர் உயிருக்குயிராக வளர்க்கும் அந்தப் பருந்தை எப்படிப் போய் நாம் கேட்பது? அதைப் போல் சிறந்த பருந்தும் இந்தப் பக்கத்திலேயே கிடையாதே. அப்படி யிருக்க, அந்தப் பருந்தை அவர் எப்படி முழுமனதுடன் எனக்குக் கொடுப் பார்? அதோடு கூட ஏற்கனவே நம் குடும்பத்துக்கும் அவர் குடும்பத்துக் கும் ரொம்ப மனஸ்தாபம். என் தாத்தா அவருடைய தாத்தாவைக் கத்தி யால் ஒரு சமயம் குத்திக்கொன்று விட்டாராம். அன்றைய தினத்திலிருந்து

எங்களிருவருக்குமுள்ள மனஸ்தாபம் தீரவேயில்லே. அப்படி யிருக்கும் பொழுது நான் எப்படி அவரிடம் போய் அந்தப் பருந்தை என் பிள்ளே கேட்கிறான் என்று சொல்லுகிறது?'' என்று அவள் மனம் தத்தளித்தது.

இப்படிப் பலநாட்கள் சென்றன. குழந்தைக்கோ நாளுக்குநாள் ஜுரம் அதிகரித்துக்கொண்டே வந்தது. கடைசியில் தன் குழந்தையின் உயிரைக் காப்பாற்றும் பொருட்டுத் தன் மானத்தையும் தியாகம் செய்யத் துணிந்தாள் தாய். ஒருநாள் அதிகாலேயில் மிஸ்டர் பாபுவின் குடிசைக்குள் நுழைந்தாள். அவரும் அவளே நன்கு வரவேற்று அவளுக்கு உட்கார ஆசன மளித்தார்.

அவள், ''மிஸ்டர் பாபு, 'நீங்கள் என்னே இவ்வளவு கண்ணியப்படுத்தி யதுபற்றி ரொம்ப சந்தோஷம். இன்று உங்களுடன் விருந்துண்ண இச்சைகொண்டே இங்கு வந்திருக்கிறேன்'' என்று கூறினுள்.

''ஆகா, அதற்கென்ன? இதோ போய்த் தாதியிடம் சாப்பாடு தயார் செய்யச் சொல்லிவிட்டு வருகிறேன்,'' என்று சொல்லிவிட்டு சமைய லறைக்குப் போனூர்.

வெளியில் பகட்டாக அப்படிச் சொல்லிவிட்டாரே யொழிய, அவ ருக்கு அப்பொழுது இன்னது செய்வதென்று ஒன்றும் புரியவில்லே. வீட் டிலோ சமையலுக்கு ஒன்றும் கிடையாது. 'இன்று நாம் பட்டினிதான்' என்று நினைத்துக் கொண்டிருந்த அவருக்கு ஒரு விருந்தாளியும் வந்து விட்டது! ''வந்த விருந்தாளியைப் 'போ' என்று சொல்லுவது மரியாதை யில்லேயே. என்ன செய்வது?'' என்று தன் கிழத் தாதியுடன் கலந்து யோசித்தார். அவள், ''ஐயோ! வீட்டில் ஒன்றுமே இல்லேயே. சில காய்ந்த மாமிசத் துண்டுகள்தா னிருக்கின்றன. அவளுக்கு நாம் அவை களே எப்படிப் பரிமாறுவது?'' என்று கேட்டாள். மிஸ்டர் பாபு அவள் காதில் ஏதோ இரகசியமாகச் சொல்லிவிட்டு மறுபடியும் சாந்தகுமாரி இருந்த இடத்திற்கு வந்தார்.

இதற்குள் சாந்தகுமாரிக்கு விஷயமெல்லாம் புரிந்து விட்டது. அவள் அக் குடிசையினுள் நுழைந்தபோது அவர் இவ்வளவு ஏழையாகப் போயி ருப்பார் என்று எதிர்பார்க்கவே யில்லே. ஆனூல் ஒரு நிமிஷ நேரத்தில் அவள் அவருடைய அப்போதைய நிலேமையை அறிந்துகொண்டு விட்டாள். முன்பு காலாபக்கத்துச் சுவர்களிலும் மாட்டப்பட்டிருந்த நானுவித படங் களேயும் இப்பொழுது அங்கே காணேம். பலவித கலர் பல்புகளேயுடைய மின்சார விளக்குகளேயும் அங்கே காணேம். முன்பு அங்கே வேலேசெய்து கொண்டிருந்த பல வேலேக்காரர்களேயும் காணேம். மேஜை, நாற்காலி முதலிய ஒன்றுமே அங்கே இல்லே. அவைகள் எல்லாம்தான் காதல் பரி சாக அவள் வீட்டிற்குப்போய் விட்டனவே. அங்கு எப்படி இருக்கும்?

இதை யெல்லாம் பார்த்ததும் அவள் ஒரு கொடியில் அவருடைய ஏழ் மைத்தனத்தை அறிந்து கொண்டாள். அவள் மனம் அவருக்காக வருந்தி யது. ஆனூலும் அவள் ஒருபுறம் மகிழ்ச்சி யடையாமல் இருக்க முடிய வில்லே, ஏனென்றுல் அங்கே எவ்வளவுக்கெவ்வளவு சாமான்கள் காணப்

படவில்லையோ அவ்வளவுக்கவ்வளவு அவருடைய காதலின் மகிமை விளங்குகிறதல்லவா? தனக்காகவே அவர் அவ்வளவு சுகங்களையும் துறந்தார் என்று அவள் நினைத்தபொழுது அவளுக்கு ஒரு தனிப்பெருமை உண்டாயிற்று. உண்மையில் அவளும் அவரை மனமாரக் காதலித்துத்தான் வந்தாள். தடும்பச் சண்டைகளெல்லாம் உண்மைக் காதலுக்கு முன் எம்மாத்திரம்? ஆனாலும் அவள் தன் காதலை வெளிப்படையாகக் காட்டிக்கொள்ளவில்லை. ஏனென்றால் அவளுக்கு ஒரு மூத்த சகோதரன் உண்டு. அவன் அயலூரில் வசித்து வந்தான். அவன் இவளுடைய காதல் போக்கு வரத்துக்களை அறிந்தால் கோபிப்பான் என்று பயந்தே, அவள் தன் காதலை வெளிப்படுத்தாது மூடி மூடி வைத்துக் கொண்டிருந்தாள்.

மிஸ்டர் பாபு சமையல் தயாராகும் வரை அவளுடன் சந்தோஷமாக உரையாடிக் கொண்டிருந்தார். வீணையில் சில பாட்டுக்களும் பாடி அவளுக்குக் காண்பித்தார். அன்று போலவே என்றும் தம் வாழ்நாளைக் கழிக்கவேண்டும் என்னும் அவா அவர் மனத்தில் அப்பொழுது எழுந்தது.

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கும் பொழுதே தாதியும் இலை போட்டு சாப்பாட்டைப் பரிமாற ஆரம்பித்து விட்டாள்.

தாதி சாந்தகுமாரியைப் பார்த்து, "அம்மா, இதோ நல்ல பறவையொன்றைப் பதம் செய்து வைத்திருக்கிறேன். ஆனால் அது வேகிறதற்குப் போதிய நேரம் இல்லை. இருந்தாலும் அது மிகவும் ருசியாக இருக்கும் என்றே நினைக்கிறேன்," எனறு கூறினள்.

சாந்தகுமாரி அதை யெல்லாம் ருசி பார்ப்பவள்போல் பாசாங்கு செய்தாளே தவிர. ஒன்றையும் அவள் எடுத்துச் சாப்பிடவில்லை. உண்மையில் பசி எடுத்தபோதிலும் அவளுக்கு அப்பொழுது சாப்பிட வேண்டுமென்ற விருப்பமேயில்லை. கருமமே கண்ணாயினர் பசி நோக்காரல்லவா?

'தான் வந்த காரியத்தை எப்படி அவரிடம் வெளியிடுவது? அந்தப் பருந்தைக் கொடுக்கும்படி அவரை எப்படிக் கேட்பது?' என்று அவள் மனம் வேதனைக் குள்ளாயது. வெகுநேரம் வரை அவரைக் கேட்க அவள் நெஞ்சம் துணியவில்லை. கடைசியில் ஒருவாறாகத் துணிந்து மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள்.

"எனக்குக் கூட நாழிகை யாகிவிட்டது. என் பிள்ளை [illegible]ப்படி இருக்கிறானோ போய்ப் பார்க்கவேண்டும். அவனுக்குச் சில[illegible]க ரொம்ப ஜுரம் அடிக்கிறது," என்று மெள்ள மூட்டையை அவிழ்[illegible]ள்.

அவர், "நான் போனதடவை அவனைப் பார்த்தபொழுது அவனுக்கு உடம்பு ஒன்றும் இல்லையே. நன்றாகத்தானே இருந்தான். நான் என் பருந்தைப் பறக்க விடும்போது கூட அதைப்பார்த்து அவன் ரொம்ப களிப்படைந்தானே," என்றார்.

அவள், "ஆமாம் ஆமாம். என்னிடம் கூட அவன் சொன்னான். ஒரு தடவைப் பருந்தை அவனிடமே கொடுத்து அவனையே பறக்க விடும்படி நீங்கள் சொன்னீர்களாமே," என்று கேட்டாள்.

அவர், "வாஸ்தவந்தான். அப்பொழுது அவனடைந்த மகிழ்ச்சிதான் என்ன! அவனுக்கும் அந்தப் பருந்துக்கும் தான் பொருத்தம்," என்றார்.

"உங்கள் கணக்குப்படி அதன் மதிப்பென்ன?" என்று மனம் துடித்த வாறே அவள் கேட்டாள்.

"என்ன? என் பறவைக்கா? அதற்கு மதிப்பேது? நான் ஒருகாலும் பணத்திற்காக அதை விற்கமாட்டேன்," என்று கூறினார் அவர்.

"இதோ நீங்கள் கொடுத்த வெகுமானத்தைத் திரும்ப வாங்கிக் கொள்ளுங்கள். உங்களை நான் இப்பொழுது வேறொன்று கேட்க விரும்புகிறேன்," என்று சொல்லிக்கொண்டே தன் கழுத்தில் அணிந்திருந்த முத்து மாலையைக் கழற்றி அவர் முன் வைத்தாள். அந்த முத்துமாலைதான் அவர் அவளுக்குக் கடைசியாக அனுப்பிய காதல் பரிசு. "நான் இந்த முத்து மாலையை பெற்றுக்கொள்ளப் போவதில்லை. ஏனென்றால் நான் இப்பொழுது தங்களைக் கேட்கப்போவது இந்த முத்துமாலையைவிட எத்தனையோ மடங்கு மதிப்புள்ளது. இறக்க விருக்கும் என் மைந்தன் மீது எனக்குள்ள பாசம் அதைத் தங்களிடமிருந்து கேட்கும்படி என்னைத் தூண்டுகிறது" என்று சொன்னாள் அவள்.

"எதைக் கேட்டாலும் சரி, நான் கொடுக்கத் தயாரா யிருக்கிறேன்," என்றார் அவர்.

இன்னமும் அதைக் கேட்பதற்கு வேண்டிய தைரியம் அவளுக்கு வர வில்லை. ஆனாலும் சிறிது நேரத்தில் தன் மனதைத் திடப்படுத்திக்கொண்டு அவள், "ஜுரத்தினால் வருந்தும் பிள்ளைகளைப்பற்றி உங்களுக்கே தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். 'இது எனக்குவேண்டும், அது எனக்கு வேண்டும்,' என்று மனதில் தோன்றியதை யெல்லாம் அப்பொழுது அவர்கள் கேட்க ஆரம்பித்து விடுவார்கள். அதை அவர்களுக்கு வாங்கிக் கொடுக்காவிட்டாலோ மனம் வருந்தி அவர்கள் இறந்து விடுவார்கள். அப்படிப்பட்ட கஷ்டமான நிலைமையில் தான் நானும் இப்பொழுது இருக்கிறேன். உங்களுக்கும் குழந்தை குட்டிகள் இருந்தால் என்னுடைய நிலைமை உங்களுக்கு நன்றாக விளங்கும். நாளுக்குநாள் என் பையனுடைய தேக நிலை மோசமாகிக்கொண்டே வருகிறது. அவன் தினமும் 'எனக்கு வேண்டும், எனக்கு வேண்டும்,' என்று சொல்லும் பொருள் ஒன்றேதான். அது தான் ............உங்கள் பருந்து," என்று கூறி முடித்துவிட்டு அவர் என்ன பதில் சொல்லப் போகிறாரோ என்று அவர் முகத்தையே பார்த்தவண்ணமாக இருந்தாள்.

"என்னுடைய பருந்தா?" என்று ஆச்சரியத்துடன் கேட்ட அவர் சிறிதும் தயங்காமல், "அது ஒருகாலும் முடியாது," என்று சொல்லி விட்டார்.

முழுவதும் ஏமாற்றமடைந்தவளான தாய் மனம் மிக நொந்து, "முடியாதா? ............எனக்கு அப்பொழுதே தெரியும், நீங்கள் இப்படிச் சொல்லுவீர்களென்று. உங்களுக்கு உயிருக்குயிரான அவ்வளவு உயர்ந்த பொருளை நான் கேட்பது தப்பிதம்தான் ............ஐயோ! இதை நான்

எப்படி அவனிடம் போய் சொல்லுவேன்?........சரி, மிஸ்டர் பாபு, நான் போய் வருகிறேன். என்னை வரவேற்று விருந்தளித்ததைபற்றி மிகவும் சந்தோஷம்," என்று சொல்லிக்கொண்டே தன் மாளிகையை நோக்கிப் புறப்பட்டாள்.

ஆனால் மிஸ்டர் பாபு அவளைப் போகவொட்டாமல் தடுத்து, "அம்மா, நீ இப்பொழுது கேட்டதை கொஞ்ச நேரத்திற்கு முன் கேட்டிருக்கக் கூடாதா? ஒருமணி நேரத்திற்கு முன்—என் குடிசையினுள் நீ நுழைந்ததுமே—என்னைக் கேட்டிருந்தாயானால் நான் அதை அப்பொழுதே உனக்குக் கட்டாயம் கொடுத்திருப்பேன். நீ வந்தபொழுது உனக்கு விருந்து செய்ய என்னிடம் ஒன்றுமில்லை யாதலால் என் வசமிருந்த மிகவும் அரிய பொருளையே சமைத்து உன் முன் வைத்தேன். உனக்கு விருந்திடுவதற்காக நான் என் பருந்தைக் கொன்று விட்டேனே", என்று மெலிந்த குரலில் கூறினர்.

அவருடைய வார்த்தைகளைக் கேட்டதும், "ஆ பாபு! பாபு!" என்று சொல்லிக்கொண்டே அவருடைய பாதத்தடிகளில் விழுந்தாள் சாந்தகுமாரி. "ஆஹா! என்மீது உங்களுக்கிருந்த காதலின் வன்மைதான் என்ன! என் சகோதரனைப்போல் ஆயிரம் சகோதரர்கள் 'கூடாது' என்று சொன்னபோதிலும் உங்களைக் காதலிக்காமல் என்னால் இருக்க முடியவில்லையே," என்று அவள் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தவாறே கூற, மிஸ்டர் பாபு, "சாந்தா! எழுந்திரு. என் பருந்து உயிருடனிருந்தவரையில் உன் காதலை என்னால் அடைய முடியவில்லை. என் பருந்து இறந்ததனாலன்றோ இன்று நான் உன் காதலை யடைந்தேன்?...........சரி, வா. நாம் இருவரும் உன் குழந்தையிடம் சென்று அவன் குணமாவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வோம்," என்று கூறி அவளைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு அவள் மாளிகைக்குச் சென்றார்.

[Tennyson என்னும் ஆங்கிலப் பெரியார் எழுதிய The Falcon என்னும் செய்யுட் கதையைத் தழுவியது.]



# அறியாமைதானே!

(தி. முத்துராமகிருஷ்ணன்.)

ஆண்டவன் இவ்வற்புத உலகை சிருஷ்டித்து அதில் கிடைத்தற்கரிய மானிட வர்க்கத்தையும் அவர்கள் வாழ்க்கையை வெற்றிகரமாக நடத்துவதற்கு வேண்டிய சகல செளகரியங்களையும் செய்து சோதனை குட்படுத்துகிறான். சகல ஜீவகோடிகளும் பிறந்து பிறந்து அழிவதே இவ்வுலகத்தின் பெருமையாக இருக்கிறது. அது பற்றித்தான் செந்நாப்போதாரும்,

நெருந லுளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத் திவ்வுலகு"

என்றருளினார் போலும். என்ற போதிலும் மானிட வர்க்கங்கள் அதனதன் வேலையை ஒழுங்காக செய்துகொண்டிருக்கின்றன.

ஆகவே, மனிதன் தனது வாழ்க்கைப் போராட்டத்தை நடத்தவும் இன்னும் உயிர் வாழவும் சக்தி என்ற ஒன்று மிகமிக அவசியமாகி யிருக்கிறது. இச் சக்தியை பெறுவதற்கு ஆகாரம் அத்யாவசியமா யிருக்கிறது. அது பற்றித்தான் கடவுள் வானையும் மற்றும் செடி கொடிகளையும் சிருஷ்டித்து வைத்திருக்கிறார். அவைகளிலிருந்தே நாம ஆகாரத்தைப் பெற்று அதனால் சக்தியை அடைகிறோம்.

இவ்வுலகம் மிகவும் விசாலமானது. வதவதவென்று சுமார் 200 கோடி ஜனங்கள் உள்ள உலகம். உலகத்தின் எல்லா பாகங்களிலும் ஒரே சீதோஷ்ண ஸ்திதி இல்லை. ஆகவே, வெவ்வேறு சீதோஷ்ண ஸ்திதியில் அமைந்திருப்பதால் அந்தந்த சீதோஷ்ண ஸ்திதிக்கு தகுந்தவாறு ஆகாரத்தை உட்கொள்ளவேண்டி யிருக்கிறது. ஆகார வசதிகள் அப்படித்தான் அமைந்திருக்கிறது என்றுதான் சொல்லவேண்டும். சுமார் முக்கால் வாசி ஜனங்கள் உட்கொள்ளும் ஆகாரம் அரிசியே. அதாவது நெல் பயிரே (விவசாயம்) உலகில் பெரும்பாலும் பயிரிடப்படுகிறது.

ஆனால் அரிசியை மாத்திரமதானா நாம் உட்கொள்கிறோம். மற்றும் சத்துள்ள ஆகாரங்களைச் சேர்த்து நாம உண்ணுகிறோம். பௌதிக ஆராய்ச்சியாளர்கள் இன்னின்னவற்றில் இன்னின்ன சத்துள்ள ஆகாரங்கள் அமைந்திருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இன்ன ஆகாரம் இல்லாவிட்டால் இன்ன வியாதி வரும் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆகவே, இதை யெல்லாம் அனுசரித்தே நாம் வாழ்க்கையை நடத்துகிறோம்.

ஆனால், சிலர் ஒரே ஆகாரத்தை உட்கொண்டுவிட்டு பின் ஏதாவதொரு வியாதியினால் பீடிக்கப்பட்டு துன்புறுகிறார்கள். உதாரணமாக சிலர் அரிசியை மாத்திரம் சாப்பிடுகிறார்கள். இவ்வாறு அரிசியை மாத்திரம் சாப்பிடுவதனாலும் `அதிலும் வயிறு புடைக்கச் சாப்பிடுவதனாலும்,

டயரோகியா (Diarrohea), காலரா (Cholera), நீரழிவு (Diabetes), முதலிய வியாதிகள் உண்டாகின்றன என்று டாக்டர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். என் செய்யலாம் வறுமை தாண்டவமாடுகிறது. பொருளாதார நிலைமை நாளுக்கு நாள் மோசமாகச் சென்றுகொண்டிருக்கையில் சரியான ஆகாரத்து(Balanced Diet)க்கு எங்கே வழி யிருக்கப்போகிறது?

இந்தியாவில் பெரும்பான்மையோர் விவசாயத்தையே தொழிலாகக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே, அரிசியே நமக்கு முக்கியமான ஆகாரமாக அமைந்திருக்கிறது. அரிசியை மாத்திரம் சாப்பிடுவதனால் பலவித வியாதிகள் வருகின்றன என்கிறார்கள். இந்தக் கொள்ளையில் நாம் அந்த அரிசியை எவ்வாறு பண்படுத்தி சமைத்து உட்கொள்கிறோமென்று கவனித்தால் நம் அறியாமை நன்கு விளங்கும்.

சாதாரணமாக, நெல் அறுவடையானதும் அதை நன்றாய் அவித்து பின் குத்தி அதைச் சமைத்து பின் தண்ணீரை நன்றாய் வடிகட்டி சாப்பிடுவது வழக்கமாக இருந்துவருகிறது. இப்படிச் சாப்பிடுவதனாலே அரிசியிலுள்ள சத்து எவ்வளவோ அனாவசியமாக நீங்கிவிடுகிறது. ஆக்கம் இப்படியிருக்கையில் தற்காலம் அதுவும் யந்திரங்களினால் அரிசி தீட்டப்படுகிறது. அதாவது நெல்லை நன்றாய் அவித்து பின் தீட்டி அதை முன்சொன்னபடி சமைத்து சாப்பிடுகிறோம். இதில் என்ன அலங்கோலத்தைக் காண்கிறோமென்றால் அதுதான் பரிதாபமானது.

இங்கே கைக்குத்தலரிசிக்கும் மிஷின் அரிசிக்கும் உண்டான வித்தியாசத்தைக் கவனிக்கவேண்டியது மிக மிக முக்கியம். மிஷின் வருவதற்கு முந்தி நம் நாட்டில் கையினால்தான் அரிசியை குத்தி வந்தார்கள். ஆனால் தற்பொழுது பாழாய்ப்போகிற இயந்திரத்தின் உதவியைக்கொண்டு நொடிப்பொழுதில் குத்திவிடுகிறார்கள். இதனால் மூன்று பெருந் தீங்குகளும் நஷ்டமும் நமக்கு ஏற்படுகிறது.

ஒன்று சத்து நீங்கிய சக்கையை உட்கொள்கிறோம் என்பதை நாம் அறியாமல் இருக்கிறோம். அறிந்தும் திருத்தாமலும் திருத்த முடியாமலும் தத்தளிக்கிறோம். தன் காரணமாக நாளுக்கு நாள் எலும்புக் கூடாய்ப் போகிறோம். நாளொரு தோலும் பொழுதொரு எலும்புமாகத்தான் போகிறோமென்றால் அது வேடிக்கையாகாது. இரண்டாவதாக கையினால் குத்தி பிழைத்துவந்த ஏழை மக்கள் வாயில் மண் விழுந்தது. எத்தனையோ ஏழை மக்கள் அரிசியைக் குத்தி அதனால் கூலியாக அரிசியைப் பெற்று ஜீவனம் நடத்தி வந்தார்கள். அவர்கள் கதி என்னவாயிற்றோ? பாவம், அவர்கள் வேறு ஏதாவது வழியை நாடித்தானே ஆகவேண்டும். மூன்றாவதாக, நாம் முழுச் சோம்பேறிகளானோம் என்றால், என்மேல் நீங்கள் கோபம் கொள்ளக் கூடாது. உதாரணமாக, ஒரே ஒரு சந்தர்ப்பத்தை இங்கு கூறிவிடுகிறேன். எங்கள் வீட்டில் சுமார் நான்கு ஐந்து வருஷங்களுக்கு முந்தி யெல்லாம் கையினாலே அரிசியைக் குத்திவந்தார்கள். மூன்று கோட்டையானாலும் கூலிப் பெண்களோ ஒருநாள் இரண்டு நாளில் குத்திக் குவித்துவிடுவார்கள். ஆனால் இன்று நடப்பதென்ன? இரண்டு மரக்கால் என்றாலும் மிஷின்தான். உம், அரைஅணாதானே என்று போகிறது அவர்கள் மனம்.

இனி எவ்வாறு சத்து நீங்குகிறது என்று பார்ப்போம். கைக்குத்தலரிசிக்கும் மிஷின் அரிசிக்கும் உண்டான வித்தியாசத்தைப் பார்த்தால் பளீரென்கிறது.

| | புஷ்டி | உலோக சம்பந்தம் | அயம் | விடமின் B |
|---|---|---|---|---|
| கைக்குத்தலரிசி | 8.49% | 0.70% | 2.22% | 100 |
| மிஷின் அரிசி | 6.85% | 0.50% | 1.02% | 26% |

26%-வது இருக்கிறதென்று சந்தோஷப் படவேண்டாம். அநேகர், மிஷினில் அரிசி தீட்டப்பட்டதும் அது சுத்த வெள்ளையாக இல்லாவிட்டால், மிஷின்காரன் பாடு ஆபத்துதான். அவனைத் திட்டுவார்கள். அந்த சங்கு போன்ற வெள்ளரிசியை சில பணக்காரர்கள் போடு ஒரு 'எக்ஸ்டரா தீட்டு' என்று மறுபடியும் தீட்டிவிடுகிறார்கள். ஆகவே, நாம் நெல்லை அவிக்கிறோம்; பின் குத்துகிறோம். அதன்பின் நீருடன் சமைத்து நன்றாய் வெந்தவுடன் அந் நீரை அப்படியே வடிகட்டிவிட்டு சக்கையை நாம் உட்கொள்கிறோம் என்பதை நாம் இன்னும் அறியாமல்தானே இருக்கிறோம்.

இவைகளைப் போக்க கடைசியாக சர்க்கார்தான் முன் வரவேண்டும். அன்றி, அதற்கு புனர்ஜன்மமே கிடையாது. முதல் முதலில் 'பிலிப்பைன்' தீவில் தீட்டப்பட்ட அரிசிக்கு அதிக வரி விதித்திருக்கிறார்களாம். ஆனால் அதெல்லாம் சுதந்திர நாட்டில்தான் கைகூடும். மற்று இப்பொழுது இருக்கிற காருண்ய சர்க்கார் இந்த வழியையாவது அனுசரிக்கவேண்டும். தீவிரமான பிரசாரம் அவசியம். என்னமோ லக்ஷக் கணக்காக ரூபாய்கள் செலவழித்து சென்னை சர்க்கார் கூனூரில் ஆராய்ச்சிகள் நடத்திக் கைக்குத்தரிசியே நல்லதென்று வெளியிட்டுயிருக்கிறார்களாம். இதெல்லாம் என்ன பிரயோஜனம்? பிரசாரம் செய்யவேண்டும். குடிநூல் என்ற பத்திரிகையில்கூட காந்தியடிகள் முதலிய தலைவர்கள் இதைப் பற்றி எழுதியிருக்கிறார்கள். அப்படியிருந்தும் அறியாமை மறைவதாகக் காணோம்.

மிஷின் அரிசி நிர்ப்பந்தம் குறையுமட்டும் தவிட்டையாவது அதாவது மாடு, கோழிகளுக்குப் பெண்மணிகள் உபயோகிக்கும் அந்தத் தவிட்டையாவது சிறிது சிறிதாக உட்கொள்வது நலமென்றும் அதன்பின் அரிசியை நீரை வடிகட்டாமல் சாப்பிடுவதும், தவிட்டு பலகாரங்கள் சாப்பிடுவதும் மிகவும் நலமென்றும் பிரபல ஆசிரியர் ஒருவர் விவரிக்கிறார். என்ன இருந்தாலும் தம்பதிகள் மனது வைத்துவிட்டால் என்னதான் நடக்காது? எல்லாம் இறைவன் அருள்!



# மங்கலக் கோயில் மர்மம்

(பூவை—அ. க. நவநீதகிருஷ்ணன்.)

பூந்தமிழ்ப் பொருநையாற்றின் பொற்புமிக்க கீழ்க்கரை. செழித்து விளங்கும் அடர்ந்த மாஞ்சோலை. அச் சோலையில் பல நாட்களாக ஒரு முனிவர் பெருந்தவம் புரிந்து வருகின்றார். நாள்தோறும் அம் முனிவர் தண் பொருநையாற்றில் நீராடி, மாஞ்சோலை காய்த்துக் கனிந்து உதிர்க்கும் மாங்கனிகளில் தமக்கு வேண்டுவனவற்றை உண்டு கிட்டை கூடுவார்.

இந்த முனிவர், வயதில் முதிர்ந்தவராக இருந்தாலும் சுமார் ஒரு மாத காலமாகத் தான் இவ் வுத்தியோகத்தை மேற் கொண்டுள்ளார். ஆனால், இந்த ஒரு மாத காலமும் தவம் மிகவும் கடுமையாகத் தான் நடக்கின்றது. எந்தக் கடவுளைக் குறித்துத் தவஞ் செய்கின்றாரோ தெரியவில்லை. ஒரு வேளை, புத்தர் உலகத் துன்பங்களை நீக்குதற்குரிய வழியை அறிய வேண்டித் தவம் செய்தது போல, இவரும் எத்தத் துன்பத்தையும் நீக்க இத் தொழிலை மேற்கொண்டிருப்பாரோ என்னவோ! எப்படியிருந்தால் தான் என்ன? விடிந்தால் தெரியும் வெளிச்சம் என்றாற் போலக் காரியம் வெளிக்குத் தெரியாமலா போய் விடும்! கட்டாயம் தெரியத்தான் செய்யும்.

*　　*　　*　　*

நம் தமிழ்ப் பொருநையாற்றின் கீழ்க்கரையில் ஆற்றிற்குச் சிறிது தூரத்தில் மானுபரண நல்லூர் என்ற ஊர் ஒன்று உள்ளது. அங்கு முற்காலத்தில் மானுபரணன் என்ற மன்னன் ஒருவன் இருந்தான். அவனுக்குத் தன் பெயரால் ஓர் கோயில் — வேண்டு மென்று பேராசை. அதுவும் இப் பொருநையாற்றின் கரையிலேயே கட்ட வேண்டு மென்பது. கோயில் கட்டுதற்கு எவ்வளவு பொருள் செலவானாலும் காரியமில்லை. கோயில் மட்டும், 'இந்த உலகத்திலேயே அத்தகை அழகு வாய்ந்த கோயில் இல்லை' என்று எல்லோரும் போற்ற வேண்டும். இந்த ஒரே நோக்கந்தான் மானுபரணனுக்குக் கோயிலைப் பற்றி உள்ளது.

சிறந்த சிற்பியர்கள் எங்கெங்கு உள்ளார்கள் என்று தேட ஆரம்பித்தான். ஒற்றர்களையும் தூதர்களையும் பல விடத்தும் அனுப்பித் தேடினான். கடைசியாகத் தகப்பனும் மகனுமாய் இருந்த இரு பெருஞ் சிற்பிகளைக் கண்டு பிடித்தான்.

கோயில் கட்டும் வேலை, பொருநைக்கரையில் ஆரம்பமாயிற்று. தகப்பன், கீழ்க் கரையில் சுவாமி கோயிலைக் கட்டுவதென்றும், மகன், மேல் கரையில் அம்மன் கோயிலைக் கட்டுவ தென்றும் முடிவு கட்டினர். நாள் தோறும் தகப்பன் கீழ் கரைக் கோயிலைக் கட்டும் முறையைக் கண்டு கண்டு சென்று மேல் கரையில் மகன் அதைப் போல் அமைப்பான். இப்படியே இரு கோயில்களும் கட்டி முடிவடைந்தன.

கட்டி முடிந்ததும் மகன் கட்டிய மேல் கரைக் கோயிலைப் பார்ப்பதற்குத் தகப்பனாகிய சிற்பி வந்தான். கோயில் அமைப்பையும் சித்திர வேலைப்பாடுகளையும் கண்டான். அவனுக்குப் பெருவியப்பாயிருந்தது. அத்துணை அழகு! எது, மகன், தகப்பனுக்கு மிஞ்சியவனாகவன்றோ இருக்கிறான் என்ற பொறாமை யெண்ணம் மனத்தில் உதித்தது. அவ்வளவு தான். கையில் இருந்த கொட்டாப்புளியைக் கொண்டு, மகன் மண்டையில் ஓங்கி ஓர் அறை அறைந்தான். ஐயோ! செத்தேன்! என்று அலறி வீழ்ந்தான் மகன்.

இரு கோயில்களையும் கட்டுதற்கு உத்திரவிட்ட மானாபரணன், அவைகளைப் பார்த்தற்கு ஒரு நன்னாளைக் குறிப்பிட்டான். அந்நாளில் பொருநையாற்றில் நீராடிக் கீழ்க் கரைக் கோயிலுட் சென்றான். அதன் அழகைக் கண்டு மகிழ்ந்தான்.

பின், மேல் கரைக் கோயிலைப் பார்க்கச் சென்றான். அதனையும் பார்த்தான். அதன் அழகு, தகப்பன் கட்டிய கீழ்க்கரைக் கோயிலினும் எத்தனையோ மடங்கு மிக்க அழகுடன் திகழ்ந்தது. அதைக் கண்டு வியந்த அரசன், "இதனைக் கட்டிய உன் மகன் எங்கே?" என்று தகப்பனாகிய சிற்பியைக் கேட்டான். நடந்ததை அறிந்தான். இத்தகைச் சிறந்த சிற்பியைக் கொன்ற இவனைச் சும்மா விடுதல் கூடாது என அரசன் எண்ணினான். என்ன செய்வதென்று சில நாட்கள் ஆலோசித்தான்.

ஒரு நாள் திடீரெனத் தகப்பனாகிய சிற்பியுடன் கோயிலுள்ளே சென்றான். பின்னர், மன்னன் ஒருவனே கோயிலுள்ளிருந்து வெளிவந்தான். உள்ளே என்ன நடந்தது? உடன் சென்ற சிற்பி எங்கே?

ஆனால், சிவலிங்கத்தின் அருகில் முதலில் இல்லாத ஒன்று காணப்பட்டது. அஃது என்ன? கற்கம்பம் ஒன்று நாட்டப் பட்டிருந்தது. அதில் கொஞ்சம் எழுத்துக்களும் செதுக்கப்பட் டிருந்தன.

* * * *

பூவையில் பலே திருடன் சண்முகத்தேவன் பெரிய கொள்ளைக்காரன். பட்டப்பகலிலும் பயமில்லாது கொள்ளை யிடுவான். பலே திருடன் சண்முகத்தேவன் என்றால் கருப்பத்துள் இருக்கும் குழந்தைக்கும் ஒரு கலக்கந்தான். கொலை செய்வதெல்லாம் அவனுக்கு வாழைக்காய், கத்தரிக்காய் அரிவது போலத்தான்.

இவனைப் பிடிக்க அரசாங்கத்தார் எத்தனையோ தந்திரங்கள் செய்தும் அகப்படவில்லை. கடைசியாக எப்படியோ சிறைச்சாலையுள் அடைபட்டான். சிறைச்சாலையிலிருந்து தப்புவது சண்முகத் தேவனுக்கு அவ்வளவு பெரிய காரியமா! தப்பியும் வந்தாயிற்று. இனி, சண்முகத்தேவன் தலையைக் கண்டால் தூக்கு மேடை ஏற்ற வேண்டியது தான்.

அதற்காக சண்முகத்தேவன், பொதிகைமலைக் காட்டில் தன் சகாக்களுடன் மறைவாக வாழ்வு நடத்துகிறான். தனக்கும், தன் காதற் கிழத்தியர்க்கும், சகாக்களுக்கும் இன்பவாழ்க்கை நடத்தப் பணம் வேண்டாமா!

பணம் இல்லாதவன் பிணமாயிற்றே; நடைப்பிணமாக அலைந்து திரிந்த சண்முகத் தேவனுக்கு மானுபரணன் கட்டிய மானு மங்கலக் கோயில் சிவலிங்கத்தின் அருகில் நாட்டியுள்ள கம்பத்தின் நினைவு வந்தது. அது பற்றிய ஆலோசனையில் ஆழ்ந்தான்.

* * * *

ஆமாம், மன்னனுடன் சென்ற சிற்பியின் நிலை என்னவாயிற்று? கோயிலுள் அவனைக் கூட்டிச் சென்ற அரசன், சிவலிங்கத்தின் மண்டையைக் குடையுமாறு சொன்னான். சிற்பியும் அங்ஙனமே செய்தான். குடைந்த பள்ளத்துள் பதினாயிரம் பொன்னைக் கொட்டினான். அப் பள்ளத்திற்கு ஏற்றாற் போல் திறக்கு மூடியொன்று செய்யக் கட்டளை யிட்டான். அதுவும் செய்து முடிந்தது. சிவலிங்கத்தில் ஒட்டு ஏற்பட் டிருக்கின்றது, அல்லது மேலே திறக்கு மூடப்பட்டு இருக்கின்றது என்பது தெரியாவண்ணம் சிவலிங்கத்தை மூடி அழகுற அமைத்தான். அருகில் சிறியதோர் கற்கம்பத்தில் "ஆயிரம் உயிர்களையும் கொன்று, தன் தலையையும் திறகினல் பதினாயிரம் பொன் கிடைக்கும்" என்று எழுதச் செய்து சிவலிங்கத்தின் அருகில் நாட்டினான். இவ் விஷயம் பிறர் அறியாதிருக்க, இதனைச் செய்த அச் சிற்பியையும் அவ் விடத்திலேயே கொன்று பலி கொடுத்தான்.

இச் செயல் நடந்ததை எவரும் அறியார். ஊரார் எல்லாம் மகனைக் கொன்றதற்காகத் தகப்பனை, மன்னன் கொன்று விட்டான் என்று பேசிக் கொண்டனர்.

சிவலிங்கத்தின் அருகில் கற்கம்பம் ஒன்று நாட்டப் பட்டிருப்பதைக் கண்டு, அதில் எழுதியிருப்பதை அநேகர் வாசித்து, உண்மை தெரியாது என்னவோ என்று சொல்லிச் சென்றனர். சிலர், இதில் எழுதி யிருப்பது எவ்வளவு மூடத்தனமாக இருக்கின்றது! ஆயிரம் உயிர்களைக் கொல்வது எப்போ? தன் தலையைத் திறகுவது எப்போ? அப்படியே, ஆயிரம் உயிர்களைக் கொன்றாலும், தன் தலையைத் திறகி எறிந்த பின்னர், பொன்னாவது மண்ணாவது? அதை யார் பெறுவது? சுத்த பைத்தியம் என்றே பேசிப் பேசிப் போயினர். இங்ஙனம் சில நூற்றாண்டுகள் கழிந்தன.

* * * *

ஒருநாள் இரவு; விடிவதற்கு மிருந்த நேரம் உள்ளது. முனிவர் ஒருவர், பொருநையாற்றில் புனித நீராடுகின்றார். சிறிது நேரத்தில் அவர் உடம்பு முழுதும் திருநீறு பட்டை பட்டையாக வெள்ளித் தகடுகள் போல் பிரகாசிக்கின்றது.

சடைதாடியுடனும், காவி யுடையுடனும், கழுத்தில் உருத்திராட்ச மாலையுடனும், கையில் பிடித்தி கமண்டலத்துடனும் முனிவர், அவ் வாற்றின் மேற்கரையில் உள்ள மானுமங்கலக் கோயிலுட் சென்றார். சிவலிங்கத்தின் முன்னர் விழுந்து, ஏதோ வாய் முணு முணுத்தவராய்த் தொழுதார்.

அவர் தம் கண்கள், கம்பத்தின் கண் எழுதி யிருந்த எழுத்துக்களைக் கூர்ந்து நோக்கின. கண்ணென்று பார்க்கக், காதொன்று கேட்க, வாயொ

ன்று பாட என்று சொல்வார்களே! அச் செயல் முனிவரிடம் மிகவும் பொருத்தமாய் அமைந்திருக்கின்றது. கொஞ்ச நேரம் அப்படியே ஸ்தம்பித்துக் கம்பம் போல் நின்றார்.

பிறகு, கமண்டலத்தை எடுத்துக்கொண்டு ஆற்றை நோக்கி மிக விரைவாக நடந்தார். அப்போது அவருடைய முகத்தில் தோன்றிய மகிழ்ச்சியின் பத்திற்கு ஓர் எல்லை யில்லை யென்றே சொல்ல வேண்டும். ஆம், ஏன் அத்தகைய மகிழ்ச்சி ஏற்படாது? தான் அடைய எண்ணிய பொருளை நிச்சயமாய் அடையப்போகும் பொழுது மகிழ்ச்சி ஏற்படத்தானே செய்யும்.

விரைந்து நடந்த முனிவர் திருவடிக் கமலங்கள், ஆற்றின் கரையோரமாய் மீன் பிடித்துக் கொண்டிருந்த ஒரு வலைஞன் பக்கம் போய் நின்றன. கமலத்திலிருந்து ஒரு எட்டணா வெள்ளிக்காசை எடுத்து, சுவாமியார் அவ் வலைஞனிடத்து வீசி யெறிந்தார். "அப்பா! கொஞ்சம் சுள்ளை மீனை அள்ளிப்போடு" என்றார். அவனுக்கு வெள்ளிக்காசைக் கண்டதும் அவ்வளவு தான், மகிழ்ச்சி வெள்ளத்துள்ளேயே வீழ்ந்து விட்டான். தான் அது வரையில் பிடித்திருந்த சிறிய மீன்கள் அத்தனையும் அள்ளிச் சுவாமியார் மேலாடையில் கட்டி முடிந்து கொடுத்தான்.

திரும்பவும் சிவலிங்கத்தின் அருகில் வந்தார். சிறு கத்தி யொன்றை எடுத்து எண்ணிக் கொண்டே ஆயிரம் மீன்களை அரிந்து தள்ளினார். ஆயிரம் உயிர்கள் கொல்லப்பட்டன. எழுந்தார் சுவாமியார்; சிவலிங்கத்தின் தலையைத் தன் வலி யெல்லாம் சேர்த்து வைத்துக்கொண்டு ஒரு திருக்குத் திருக்கினர்.

இலிங்கத்தின் தலை மூடி சுற்றத் தொடங்கிற்று; மூடியை எடுத்துத் திறந்தார். உள்ளிருந்தன பதினாயிரம் பொன்கள். கண்டார்; கொண்டார் மகிழ்ச்சி; வாரி மூட்டை கட்டினர். திரும்பவும் சிவலிங்கத்தின் தலையை முன்னிருந்ததுபோல் செய்தார். மூட்டையைத் தலையில் தூக்கினர். பொழுது புலர்வதற்கு முன் பொதிகை மலைக்காட்டை அடைந்தார்.

பலே திருடன் சண்முகத் தேவனின் சகாக்கள், சுவாமியாரை வரவேற்றார்கள். சுவாமியார் சிறிது நேரத்தில் பலே திருடன் சண்முகத் தேவனாகக் காட்சியளித்தார்.



# பரிமேலழகர்

(ம. ரா. போ. குருசுவாமி)

மொழிகளை வளம்படுத்துவாருள் நூலாசிரியர்களும் உரையாசிரியர்களுமென இரு பாலினர் தலைமையானவர்கள். உயர்ந்த நூலாசிரியர் தோன்றுதல் அருமை; அதனினும் அருமை உயரிய உரையாசிரியர்கள் தோன்றுதல். தமிழ்மொழியின் தலைமை சான்ற நூலாசிரியர்களுள் முதன்மை பெறுவார் பொய்யாமொழியாராய திருவள்ளுவனார். அவர் தம் திருக்குறளுக்கு உரை எழுதியவர்கள் பதின்மர். பதின்மர் உரையுள் இன்று நாம் சிறப்பாகக் காணுவன மணக்குடவர், பரிமேலழகர் என்றிவர்கள் கண்ட உரைகளே. மணக்குடவர் உரை காலத்தால் பரிமேலழகர்க்கு முந்தியது. மணக்குடவர் எழுதிய உரை மிகச் சுருங்கிய அளவிற்று; விரிந்த விளக்கங்களும், வேண்டும் இலக்கணக் குறிப்புகளும் இல்லாதது. ஏனைய எண்மர் உரைகளையும், மணக்குடவர் உரையையும் மறையச் செய்து மேலோங்கி ஒளிர்ந்து விளங்குவது பரிமேலழகர் வரைந்த உரை ஒன்றேயாம். மற்றும், பரிமேலழகர் எட்டுத்தொகையுள் ஒன்றாய பரிபாடலுக்கும் உரை செய்துள்ளார். இவருடைய உரைச் சிறப்புக் காணக் காண நயம் விரிந்து அருமை பரந்து தோன்றுவதாம்.

தமிழ்மொழியின் தறுகண் நங்குவதற்கேற்ற வீறுபெறு பரிமேலழகர் வரலாறு, தமிழர்க்குரிய 'தனிச்சிறப்பு'க் கேற்பவே ஒன்றும் தெரிந்திலது. முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் கச்சிப்பதியில் ஒரு திருவாலயப் பூசாரியாக இருந்துவந்த ஒரு வைணவ அந்தணர் என்பது மட்டுமே பரிமேலழகரைப்பற்றி அறிஞர் கூறும் வரலாறு.

ஒரு நூலுக்கு உரை எழுதப் புகுந்த ஒருவருக்கு வேண்டுவனவாய பல ஆற்றல்களும் வியத்தகு முறையில் பரிமேலழகரிடம் அமைந்துள்ளன. வேறு நூல்களுக்கு உரை எழுதுவோரினும் திருக்குறளுக்கு உரை எழுதுவோருக்கு அருமையான ஆற்றல்களும், விரிந்த அறிவும், பரந்த நோக்கமும் இல்லையெனில், நீடு வாழும் நல்ல உரையினைக் காண்டல் இயலாது. மேற்கூறிய யாவும் பொருந்தப் பெற்றமையினால் தலைசிறந்த உரையொன்றினைப் பரிமேலழகர் அருளினார். குறட்பாக்களாக அமைவதனால் பொருட்செறிவும், தொகை நிலைத்தொடர்களும் மிகுதியாகத் திருக்குறளில் காணப்படுகின்றன. அத்தகைய நிலையில் பரிமேலழகர் குறளைப் பயின்று பயின்று அதன் முழுத்தோற்றத்தையும் தம் மனத்தே நன்கு பதிய வைத்துப் பின் பிறர் மனங்களினும் 'செலச் சொல்'லும் ஆற்றலமைந்த உரை ஒன்றினைக் கொடுத்தருளினார். 'நவில்தொறும் நூல்நயம்' என்பதற்கேற்பக் குறளையே பலகால் பயின்றமையால்தான் உயர்ந்த நயங்களை எடுத்துக் காட்டல் இயன்றது. பொருளற்ற அடைகள் வருதற்குத் திருக்குறளில் இடமில்லாமற் போகவே, வந்த அடைகட்கு ஏதாவது தக்க விளக்க உரை வேண்டும். இத்தகைய விதப்புக் கிளவிகட்கு உரை எழுதுங்கால் பரிமேலழகர் காண்டற்கரிய பேரறிவாளராகத் திகழ்வார். 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு' என்னும் திருக்குறளுக்கு விரிவுரை எழுதுங்கால் ஆசிரியர் 'வாய்' என்று கூறியதற்குரிய காரணம் கூறுவார். 'வாய் என்பது அவர் அப்பொருளின்கண் பயிலாமை

உணர நின்றது' எனக் கூறுவர். குறளில் மூன்று அல்லது நான்கு இடங்களில் 'வாய்' என்ற விதப்புக் கிளவிக்கு இடத்திற்கேற்ற நயங்களைப் பரிமேலழகர் எடுத்துக் காட்டுவார். திருக்குறளில் வருகின்ற சொற்களில் ஒன்றேனும் ஆசிரியர் பரிமேலழகர் கருத்தினின்றும் தப்பமுடியாது. ஒவ்வொரு சொல்லுக்குரிய உரையும், வேண்டுமிடங்களில் விளக்கமும், இலக்கணக் குறிப்பும் எழுதுவார். இவர் வரைந்த திருக்குறள் உரையில் ஆங்காங்கே புறநானூறு, நற்றிணை, சீவகசிந்தாமணி என்றிவற்றின் மொழிகளைப் பொன்னேபோற் போற்றிப் பயன்படுத்துவார். இவர் உரையால் 'ஏரகம்' என்ற மறைந்த நூலின் பெயரை உணர்கின்றோம். 'உபசார வழக்கு'களை அடிக்கடி எடுத்துக் காட்டுதலில் மிக விருப்பமுடையவர் போல் உரையாசிரியர் காணப்படுகின்றார். இலக்கணக் குறிப்பு வரையும் வகையில் இவருடைய உரையில் தனிப்பட்ட ஒரு குறிப்பினைக் காணுகின்றோம்; ஆகு பெயர்கள் வருகின்ற இடங்களில் அவற்றை இன்ன ஆகு பெயர்கள் என்று விளக்கிக் கூறும் வழக்கம் இவர்பால் இல்லை. படிப்போர் மனக்குறிப்பிற் கேற்றவாறு கொள்ளலாம் என்பது இவர் எண்ணமாக இருந்திருக்கவேண்டும். இவ்வகையான சிறப்புகள் இவ்வுரையி னகத்தே எண்ணில. படிக்குந்தொறும் படிக்குந்தொறும் பேரின்பம் பயப்பது என்று கூறுவதற்குரிய உரையொன் றுண்டென்னில் அஃது இப் பரிமேலழகர் உரை ஒன்றேதான். உமாபதி சிவாச்சாரியார்,

'வள்ளுவர்சீர் அன்பர்மொழி வாசகம்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை—ஒள்ளியசீர்
தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
தண்டமிழின் மேலாம் தரம்'

எனத் தலைசிறந்த தமிழ் நூல்கள் ஆறு எனக் குறிப்பிட்டார். அவற்றுள் ஒன்று திருக்குறள்; மற்றொன்று திருக்குறளுக்குப் பரிமேலழகர் எழுதிய உரை. எனின், பரிமேலழகர் உரைச் சிறப்பு நன்கு வெளிப்படுமன்றோ?

'நத்தம்போற் கேடும் உளதாகும் சாக்காடும்' என்பது போன்ற குறள்கட்கு சிறிய உரை வெளிப்பட்டது பரிமேலழகரால்தான். பரிமேலழகர் தம் உரையகத்தே பற்பல தமிழிலக்கியத் தொடர்களையும் கருத்துக்களையுமன்றி, வட நூற் கருத்துக்களை ஆங்காங்கே பெய்திருக்கின்றமையை நோக்குவார்க்கு அவருடைய தென், வடமொழிகளின் பேறிவாற்றல் நன்கு தோன்றும். வடமொழி மநுமிருதி, அர்த்த சாத்திரம், தருக்க நூல்கள், வியாகரண நூல்கள் முதலிய எண்ணிறந்த நூல்களில் தேர்ந்த அறிவுடையவர் ஆசிரியர் பரிமேலழகர்.

மேற்காட்டிய சிறப்புகள் பலவற்றினும் சிறப்புடைய தன்மை ஒன்று பரிமேலழகர்பால் உண்டு. பொது நூல் செய்த வள்ளுவர் கருத்துக் கேற்பவே பொது நோக்கங் கொண்டவராய்ப் பரிமேலழகரும் உரை எழுதினார். இக்காலத்தில் சைவர், வைணவர், சமணர், கிறிஸ்தவர் முதலாயினர் திருக்குறளைத் தத்தமக்குரிய நூலாக்க வெற்றுரைச் சொற்போர் புரிகின்றனர். அக்காலத்தில் பரிமேலழகர் இத்தகைய சமயவெறியை விரும்பியிருப்பாராயின் பிறர் மறுத்துரைக்க இயலாதவாறு திருக்குறளை வைணவ நூலாக ஆக்கியிருப்பார். ஆனால், அவர் உண்மை உணர்ந்த உரவோராக

வின், சமயநெறி நோக்கால் திருக்குறளை நோக்குதல் அறனன்று என உணர்ந்து பொது நோக்குக்குரிய உரை நன்றனை வகுத்தார்.

மனிதனொருவன் எவ்வளவுதான் அறிவாலும், நோக்காலும் உயர்ந்தவனாக இருந்தாலும் வாழும் இடம் காலங்கட்கேற்ப அவன் ஒழுகியே தீர வேண்டும். இப்பொது விதியால் பரிமேலழகரும் பிணிக்கப்பட்டமை உண்மை. அவர் காலத்துப் போக்குக்கேற்ற எண்ணங்கள் குறள் உரையில் காணப்படுகின்றன. அவருடைய காலத்தில் 'பெண்கள் அறிவுக்கு உரியரல்லர், அவர்கள் உரிமைக்கு உரியரல்லர்' என்ற எண்ணங்கள் ஓங்கி இருந்தன. 'நுண்ணறிவுடையோர் நூலொடு பழகினும் பெண்ணறிவென்பது பெரும்பே தைமைத்தே' என்பது அவர்கள் பெருமையுடன் போற்றிக்கொண்ட கொள்கை. இத்தகைய கொள்கை பரவியிருந்த காலத்தவராகையின் பரிமேலழகர் 'மக்கட்பேறு' என்பதைப் 'புதல்வரைப் பெறுதல்.' என ஆக்கினர். பெண்கள் மக்களல்லர் என்பது அக் காலத்தவர் போற்றி வைத்த மூட எண்ணம்! 'பெண்ணியல்பால் தானாக அறியாமையின் கேட்ட தாய்' என வள்ளுவர் கருதியதாக நமக்குப் பரிமேலழகர் அறிவிப்பதும் இக் கொள்கை பற்றியதேயாகும்.

அக் காலத்திய மக்கள் தமிழுக்கெனத் தனிச் சிறப்பு உண்டெனக் கொண்டிலர். ஆரியக் கருத்துக்களாலும், நூல்களாலும், முறைகளாலுமே தமிழ்மொழி ஓங்குவது என்று அப் 'பெருந்தகையினர்' எண்ணி யிருந்தனர். காலக் கொடுமையிற்பட்ட பரிமேலழகரும் இந்த எண்ணத்தைத் திண்ணிதாகக் கொண்டிருந்தார். எனவே தான், பல இடங்களில் 'இது வடநூல் வழக்கு' என எடுத்துக் கூறுகின்றார். திருவள்ளுவர் வடநூல் வழக்குகளைப் பின் பற்றி யிருந்தாரெனக் கருதினும், பரிமேலழகர் கூறுகின்ற அளவுக்குப் பின்பற்றி யிருத்தல் இயலாது. மேற்கோளாக,

"குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
யற்றந் தரூஉம் பகை'

என்ற குறளுக் கெழுதிய விளக்கத்தினைக் காணலாம். "இவை பற்றியல்லது பகைவர் அற்றம் தாராமையின் இவையே பகையாவன என்னும் வடநூலார் மதம் பற்றிக் குற்றமே அற்றம் தரூஉம் பகை" என்று வள்ளுவர் கருதியதாகப் பரிமேலழகர் கூறுகின்றார். "குற்றங்களே இறுதி பயக்கக் கூடியவை; அக் குற்றங்கள் வாயிலாக் அல்லது பகைவர்கள் இறுதி பயக்கமாட்டார்கள்' என்ற உண்மை வடநூலார்க்கே உண்டு போலும்!

குற்றம் என்பது மனிதன் கூடப் பிறந்தது. அஃது இல்லாத இடமில்லை. அளவு தான் மிக்கும் குறைந்தும் காணப்படும். இந்த உண்மையை நினைவார்க்குப் பரிமேலழகர் செய்த நன்மை தான் தெரியும். மதி களங்கமுடையதாயினும் நாம் களங்கத்தை மறந்து திங்களைக் கண்டுதானே மகிழ்கின்றோம்? அதுபோலவே பரிமேலழகரின் உயர்பண்புகளின் பெருக்கத்தால் சின்னஞ் சிறியனவாய குற்றங்களே காணப்படவில்லை.

பரிமேலழகர் சிறந்த உரையாசிரியர். அவர் போன்ற உரையாசிரியர்கள் பிறத்தல் அரிது. வாழ்நாள் முழுதும் படிக்கப் படிக்கப் புதுப்புது எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் உண்டாக்கும் ஆற்றல் வாய்ந்த உரையினை நம் தமிழ்த் திருக்குறளுக்கு—தாய்த் தமிழுக்கு நல்கிய அவருடைய நற் பண்பினை வாழ்த்துவோம், வணங்குவோம்.

# "அத்தை மகனே குமரா!"

(மதி. இரா. நமசிவாயம்.)

## I

### செல்லும் சொல்லும்

அவள் பெயர் மரகதம்.

அவன் பெயர் குமரன்.

மரகதம் மலராத ஒரு அரும்பு.

குமரன் முற்றாத ஒரு இளந்தளிர்.

அவன் அவளுக்கு அத்தை மகன். இவ்விதம் இவர்கள் உறவு இணைக்கப்பட்டிருந்தது. மாலை நேரம், மணி ஐந்து இருக்கும். வீட்டின் பின்புறத் தோட்டத்தில், அவர்களிருவரும் சிற்றிலமைத்துச் சிறு சோறாக்கி விளையாடிக் கொண்டிருந்தனர். திடீரென்று மரகதம் ஆகாயத்தை நோக்கினாள். பஞ்சு போன்ற வெண் மேகங்கள் காற்றினால், வானில் ஊசலாடிக் கொண்டிருந்தன. இது அவள் கண்ணில் பட்டது. மணலைக் கிளறிக் கொண்டிருந்த குமரனை தன் அழகிய சிறு கையால் தட்டினாள்.

"அத்தான்! அதோ அந்த மேகத்தைப் பார்த்தீர்களா! எப்படி இருக்கிறது?"

"நீ தான் சொல்லேன்!"

"வளைந்து, இந்தப் பக்கம் சாய்ந்து, புலி மாதிரி இருக்கிறதா! இல்லையா!!"

"இல்லை!"

"பின் எப்படி இருக்கிறது?"

"எனக்குத் தெரியாது!"

"தெரியாது போனால் நான் சொல்வதையாவது ஒத்துக் கொள்ளுவீர்களா, என்ன!"

"மாட்டேன்!"

"ஏன் மாட்டீர்கள்?"

குமரன் மௌனம் சாதித்தான். மரகதம் மறுபடியும் ஆரம்பித்தாள்.

"அத்தான்! எப்படித்தான் இருக்கிறது? சொல்லுங்கள்!"

"உன் மூஞ்சி மாதிரி இருக்கிறது!" என்று பளிச் சென்று பதில் சொன்னான் அவன்.

மரகதத்தின் முகம் சிறிது சுளிக்க ஆரம்பித்தது.

"உங்கள் மூஞ்சி மாதிரி தான்!"

"உன் மூஞ்சி மாதிரி தான்!"

"இல்லை !! உங்கள் மூஞ்சி மாதிரி தான் !"

"இல்லை ! இல்லை !! உன் மூஞ்சி மாதிரி தான் !"

"பதிலுக்கும் பதில் பேச்சைப் பாருங்கள் !"

"பதிலுக்குப் பதில் பேச்சைப பாருங்கள் !"

"உங்களை யார் கேட்டது ?"

"நீ தான் !"

"நானு ! நீங்கள் தான் !"

"உ............ம்.................!"

"உம்.........................!"

"நீ தானே முதலில் மேகம் எப்படி இருக்கிறதென்று கேட்டாய்! அதைச் சொன்னால் ! ..........."

ஆ ! அந்த அரும்பின் முகம் இப்பொழுது சிவந்து விட்டது. அது "காய்ந்த எண்ணெயில் கடுகு வெடிப்பது போல்" இருந்தது. இந்த கோபத்திலும், மரகதத்தின் முகம் தனியழகை அள்ளி வீசிக்கொண்டு தான் இருந்தது. மரகதம் ஒரு கணம் சிலைபோல் நின்றாள். அவளது கோபம்,

"அத்தை மகனே குமரா !
அருமைச் சந்திர நிழலா !
சந்திரசேகரர் மகளைப் பார்த்து
சாணம் பண்ணடா..............!"

என்ற பாட்டாக பரிணமித்தது, கோபத்திலும் பாட்டா ! இந்தப் பாட்டைக் கேட்டதும் குமரன் நகைத்தான். உண்மையில் மரகதத்தின் தந்தை பெயரும் சந்திரசேகரர்தான்.

"பாட்டாம் பாட்டு ! பெரிய புலவர் மாதிரிதான் ! இது நீ எனக்குக் கொடுக்கும் சாபமா ! என்ன ?" என்றான் அவன்.

"ஆம் !........." இதற்கு மேல் அவள் ஒன்றும் கூறவில்லை. சிறிது நாழிகை என்னவோ யோசித்தாள். பின்னர்,

"அத்தான் !........இனி உங்களோடே......டே.........டே............" என்று அவன் பதிலை எதிர்பார்க்காமலே கூறிவிட்டு விர்ரென்று வீட்டிற்குள் ஓடி விட்டாள். ஆனால், அவள் தன் குறும்புக் கண்களால் பார்த்துக் கொண்டு போனதை குமரனால் கவனிக்காமலிருக்க முடியவில்லை.

"சிற்றிற் பருவத்தை சிதைத்து விட்டாயே" என்று அதை அவன் புதுப்பிக்க ஆரம்பித்தான்.

## II

### மணமும் மனமும்

ஆண்டுகள் ஐந்து அகன்றோடின. மரகதம் "அன்னை தயையாய்," "அடியாள் பணியாய்," "பொன்னி அழகாய்," "புவிப் பொறையாய்," விளங்கினாள். ஆண்டின் ஒவ்வொரு அங்கங்களும், அவளுடைய அங்கங்கள்

ஒவ்வொன்றினையும் மெருகிட்டு அழகு பார்த்துக் கொண்டிருந்தன. பல பட்டதாரிகளும் பணக்காரர்களும், அவளுடைய மணக்கோட்டையை முற்றுகையிட்டனர். ஆனால், மணக்கோட்டையும் மனக்கோட்டையும் ஒருங்கே தாக்கப்பட்டு முறியடிக்கப்பட்டனர். இவ்விதமாக மரகதத்தின் மணம் அடிக்கடி ஒத்தி வைக்கப்பட்டு வந்தது.

இரவு எட்டு மணி, அவளின் பெற்றோர் பேசுகின்றனர்.

"என்ன உங்களைத் தானே! இந்த வருஷமாவது மரகதத்தின் கல்யாணத்தைப் பற்றி ஏதாவது யோசனை செய்திருக்கின்றீர்களா ?"

"யோசனை செய்வது என்ன! மாப்பிள்ளை நாம் பார்த்தபடி நல்ல முறையில் அமையவில்லையே !!"

"இப்படியே நாட்களைக் கடத்திக்கொண்டு போனால் எப்போது தான் முடிப்பது? ஒரு புத்தியறிந்த பெண்ணை எத்தனை காலம் வைத்திருப்பது? பார்ப்பவர்கள் என்ன சொல்லுவார்கள் !"

"சொல்வதென்ன! வேளையும் நாழிகையும் வந்தால் விடுமா...........? எப்படியாவது இந்த ஆவணியில் முடித்து விடுகிறேன் ?" இவ்வளவு சுருக்கமாக பேச்சு முடிந்தது.

* * * *

மரகதத்தின் மனக்குறிப்புகள் நன் முறையில் அமைந்திருந்தன. "கை நிறைந்த பொருளையோ' அல்லது "கண்ணிறைந்த" கணவனையோ விரும்பவில்லை. "கல்வி அறிவாற் சிறந்தவராய் தன்னையும் தன் குடும்பத்தையும் பாதுகாக்கப் போதுமான வருவாயுள்ளவராய் தன் தந்தைக் கேற்ற பெருமையுடையவராய் உள்ளவரையே' கணவனாக வரித்திருந்தாள். அவர் யார்? குமாரனா? இல்லை! ஏன்? அவன் தான் ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர் ஆற்று வெள்ளத்தில் அமிழ்ந்து விட்டானே! பின் எப்படி மணக்க முடியும்? ஆனாலும், அவள் நாக்கு அவனை மறப்பதில்லை.

* * * *

ஆவணி மாதம் 6-ம்தேதி திங்கட்கிழமை, மரகதத்தின் மணம் நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் அவள் மனம்......!

"நானுவித...பரிமள...பத்ர..." என்று புரோகிதர் பொருள் தெரியாது உளறிக் கொட்டிக் கொண்டிருக்கிறார். "......உம்...சேரமாச்ச...! இலை போடலாம் !!" என்று கூட்டத்திலுள்ளோர் கூறுகின்றனர்.

"மாப்பிள்ளையைப் பாருங்கள்......!" என கும்பலில் யாரோ குசுகுசுவென்று பேசுகின்றனர்.

"ஆகட்டும்...புரோகிதரே...!" என்று பணப்பையைக் குலுக்கிக் கொண்டிருக்கும் கிழவர் அதட்டிக் கொண்டிருக்கிறார்; "........கால் ரூபாய்!......அரைக்கால்.........! ஓரணா!......! அப்புறம்.........ஒரு காலணா ......பூ !!......இவ்வளவுதானா?" என்று புரோகிதர் சம்புடத்தில் சேர்த்திருக்கும் சில்லரையை எண்ணுகிறார்.........

"மாங்கல்ய...தாரணம்......ஆகட்டும் !" என்று வீட்டுக்காரர் கட்டளை இடுகிறார்.

“......கல்யாணம்......கமலாகரம்......!

கெட்டிமேளம்!...கெட்டிமேளம்...வாத்தியம்...“ம்ம்...ம்...ம்...ம்...” என்று ஒத்துக்காரன் ஊதுகிறான். அவன் கன்னங்கள் அளவுக்கு மீறி உப்புகின்றன.

‘டம டம டம டடட......!’ என்று தவில்காரன் தன் முழு சாமர்த்தியத்தையும் காட்ட முயலுகின்றான்.

‘டின்...டின்...டிம்...டிம்...’ இப்படி நிமிஷத்துக்கு நூறு மைல் வேகத்தில் ஜாலராக்காரன் தாளத்தை விரட்டுகிறான்.

இத்தனை நாளாக அடைத்து வைத்திருந்த அரிய பெரிய சங்கதிகளையெல்லாம் சக்கைசக்கையாய்ப் பிழிந்துவிடவேண்டும் என்று கருதிய நாதஸ்வரக்காரன் நாதஸ்வரத்தின் துவாரங்களை மூடித் திறந்துகொண்டு மூச்சுவிடமுடியாமல் தவிக்கிறான்!

மாப்பிள்ளை மறக்காமல் மாங்கல்ய தாரணம் செய்து விடுகிறார்.

“நீங்க...என்னு...ஆயுசோட...பிள்ளையுங்...குட்டியுமா...பெத்துண்டு......!” என்று பெரியவர்கள் ஆசீர்வதிக்கிறார்கள்.

“இத்தனைக் காட்சிகளையும் காண அவருக்கும் கொடுத்து வைக்கலியே...!” என்று பாட்டி இரண்டு சொட்டு கண்ணீர் விடுகிறாள்.

தபால் என்று தபால்காரன் கவர் ஒன்று கொடுத்துச் சென்றான். மணமகளின் தந்தை உறையைக் கிழித்து உள்ளுறையைப் படித்தார். மரகதமும் அதைக் கவனித்தாள். நீங்களும் இதைப் படியுங்கள்.

சென்னை

...................

ஆவணி 6.

...................

“அன்புகெழுமிய மாமா! வணக்கம்.

நலன்! அதுவே வேண்டுதும்!

நமது மரகதத்தின் மணங்கேட்டு மனமகிழ்வடைந்தேன். ஆயினும், “காதலன் பெற்ற பயனை கண்கள் பெற முடியவில்லையே” என வாடி வருந்தும் என் மனத்திற்கு என்ன தேறுதல் கூறுவேன்?

“அத்தை மகள் அறிவூட்டும் அன்னையாய்” வந்ததே யான் பெற்ற பாக்கியமாகும். இஃதொன்றே, என் மனத்திற்குப் போதுமான ஆறுதல் மொழியாகும்!

“அத்தை மகளை மணக்க உரிமையில்லா விடினும்” அன்னை என்ற அளவில் வாழ்த்துக் கூற உரிமையுண்டு. இதைவிட இந்த ஏழையால் என்ன செய்ய இயலும்?

பல கூறி பயன் என்ன? எல்லாம் “என்னையாளும் ஈசன் செயல்!”

## வாழ்த்து

வாழிய! மணமே!! வளர்கத் பிறைபோல்!!;
ஆழியி லன்று அமரர் பெற்ற
அமிழ்தினு மினிய "தமிழ்போ லென்றும்"
செறிமலர்க் கொன்றையான் *செலுத்திய தேர்மிசை
†"அறிவொளி" தழீஇய மாகத மணியே!
பொன்னணி மக்களொடு செம்மலை யாகி
வாழிய! வென்றே வழுத்துவன்!
தாழிருஞ் சடையன் தன்னடி பணிந்தே!

இங்ஙனம், அன்பமர்:
குமரன்."

கடிதத்தைப் படிக்கும்போதே அந்த நான்கு கண்களும் கலங்கின. ஆனால் இரண்டு கண்கள் மட்டுந்தான் அதிக நீரைச் சொரிந்தன. அது யாருடைய கண்கள்? சொல்லவும் வேண்டுமா? மரகதத்தின் கண்கள்தான்! ஆனாலும், அழுகைக் கண்ணீரா! அல்லது ஆனந்தக்கண்ணீரா!......அறியோம்!

"எல்லாம் விதியின் விளையாட்டு!" என்றார் தந்தை.

"ஆ, அந்த இளமை!!" என்று அலறினாள் அவள்.

### III

வாக்குப் பலித்தது.

மூன்று வருடங்களுக்குப் பிறகு. திரிச்சி, மேட்டுச்சிந்தாமணியில் ஒரு தெரு. மரகதம் வீட்டு வாயிற்படியில் நின்றுகொண்டிருக்கிறாள். யாருடைய வரவையோ எதிர்பார்த்த வண்ணம். அவள் கண்கள் வட்டமிட்டுக் கொண்டிருக்கின்றன. அருகே அவள் குழந்தை குமரன் விளையாடிக் கொண்டிருக்கிறான்.

"இச்...இச்..." என்று பல்லி சொல்லுகிறது.

மரகதம் சற்று யோசிக்கிறாள்.

"இச்ச்......" மறுபடியும் பல்லி வரவு உரைக்கின்றது.

"நல்ல சகுனம்.........!" என்று தனக்குள்ளே கூறிக்கொள்ளுகிறாள். ஆ! அவளது இடது தோளும் கண்ணும் துடிக்கின்றன!

"எத்தனை நற்சகுனங்கள்...... இவைகளெல்லாம் யாருடைய நன்மைக்கு...!" என்று நினைக்கின்றாள்.

"எந்தனிடது தோளும் கண்ணுந் துடிப்பதென்ன
இன்பம் வருகுதென்று சொல்! சொல்! கிளியே!!"

இப்படி அடுத்த வீட்டு கிராமபோன் பாடுகிறது.

---

* செலுத்திய தேர்=பூமி.

† அறிவொளி=ஞானப்பிரகாசம்.

"எல்லாம்.........சமது நன்மைக்கே" என்று கூறி அவள் வாயிற் படியில் நின்று கொண்டிருக்கிறாள்.

* * * *

குனித்த புருவம், கோவ்வைச் செவ்வாயிற் குமிழ்சிரிப்பு, பனித்த சடை, பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறு, நோயால் பீடிக்கப்பட்ட மெலிந்த உடல், இப்பவோ.?....பின்னேயோ, இன்னுஞ் சற்று நேரத்திலோ,..........! என்று உயிருக்கு இறுதி கூறிக்கொண்டிருக்கும் கணீர் ...கணீர்...என்னும் இருமல், ஒரு கையில் தம்புரா...இன்னொரு கையில் அழகிய திருவோடு;

இத்தனைக் காட்சிகளுக்கும் உரிய அந்த இளஞ் சந்நியாசி,

"பூட்டைத் திறப்பதும் கையாலே—மனப்
பூட்டைத் திறப்பதும் மெய்யாலே—இந்த
வீட்டைத் திறக்க முடியாமலே
விதிவிதி என்கிறார் ஞானப் பெண்ணே!"

இங்ஙனம் பாடிக்கொண்டு வீடுகள்தோறும் அரிசி வாங்கிக்கொண்டு வருகின்றார்.

"ஆ! என்ன இனிமையான இசை!" ஆனால் இடையிடையே இருமலொலி அதைத் தடை செய்கிறதே!

"குமரா...!" எனக் கூப்பிட்டாள் அவள். வீட்டு வாயிலில் அரிசிக்காக வந்த சந்நியாசி ஒரு கணம் திகைத்து நின்றார். ஏன்? அவர் பெயரும் அதுதான்போலும்! "அம்...மா!...பூ...ச்...சா...ண்...டி!" என்று ஓடி வந்து தன் தாயாரின் கால்களைக் கட்டிக்கொண்டான் குமரன். "கு...ம ...ர...ன்! பூ...ச்...சா...ண்...டி!", என்றார் துறவி. அவர் கண்கள் நீர்த் துளிகளைச் சிந்தின.

"பெரியீர்! என்ன நேர்ந்தது?" என்றாள் மரகதம்.

"ஒன்றுமில்லை...!" என பதிலிறுத்தார் அவர்.

"பிறகு ஏன் கலக்கம்?"

"எல்லாம் ஈசன்...!" அதற்குமேல் அவரால் ஒன்றும் சொல்லமுடியவில்லை. அவர் கண்கள் மாத்திரம் அவள் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தன.

"நீங்கள் யார்? இத்தனைச் சிறிய வயதில் ஏன் இந்தக் கோலம்?"

"இந்தப் பரந்த உலகில் நான் ஒரு சிறு பொடி மணல்!"

"ஆம்...! எல்லோரும் அப்படித்தான்!"

"ஆனால் என்னைப்போல் ஒருவரும் இருக்கமாட்டார்கள்" என்று தன் கதையை அத் துறவி ஆரம்பித்தார்.

"உ...ம்!" என்றாள் அந்தக் குயில் மொழியாள். "என் பெயரும் குமரன்தான். நான் சிறு வயதில் என் தாய் தந்தையை இழந்தேன். தாய் மாமன் வீட்டில் வாழ்ந்து வந்தேன். அவருக்கு ஒரு பெண். பெயர் மர

கதம். உங்களைப் போலவேதான் இருப்பாள். ஒருநாள் நானும் அவளும் தோட்டத்தில் சிற்றில் அமைத்து சிறு சோறட்டு விளையாடிக்கொண் டிருந்தோம். அப்பொழுது நடந்த சிறு நாடகம் இப்பொழுது வெள்ளித் திரைப் படக்காட்சிபோல் என் ஞாபகத்திற்கு வருகின்றது. அப்பொழுது எனக்கு ஒரு சாபங்கூடக் கொடுத்தாள்."

"ஆ! சாபமா! அப்புறம்...!"

இதைச் சொல்லும்போது சந்நியாசியின் நெஞ்சம் துடித்தது.

"சில நாட்களுக்கெல்லாம் நான் நீராடிக்கொண் டிருக்கும்போது, அதன் வேகத்தில் தாக்கப்பட்டு, உருண்டுகொண்டே போனேன். கொஞ்ச தூரம் சென்றிருப்பேன். ஆற்றில் மிதந்துவந்த மரத்துண்டைப் பற்றிக் கொண்டு சென்றேன். ஒரு சந்நியாசி என் குரலைக் கேட்டு கரையேற்றி... காத்து வந்தார். கல்வியும் கற்பித்தார்."

"உ...ம்...!" என்று பெருமூச்சு விட்டாள் அந்த அணங்கு. அவள் கண்களில் நீர் ததும்பியது. உதடுகள் ..........!

"பிறகு........"

"இப்படி என் வாழ்க்கைச்சக்கரம் இரண்டாண்டுகள் சுழன்றது."

என் வளர்ப்பு தந்தையாகிய துறவியார் ஒருநாள் ஒரு கல்யாணப் பத்திரிகை கொடுத்தார். அதில் ஆவணி 6-ல் மரகதத்தின் மணம் என்று எழுதப்பெற்றிருந்தது. நான் வாழ்த்தும் கடிதமும் அவள் தந்தைக்கு அனுப்பினேன். பிறகு அவளைப் பற்றி ஒரு செய்தியும் கிடைக்கவில்லை...

ஒருநாள் இரவு 12 மணி இருக்கும். நோயால் வருந்திக்கொண்டிருந்த ......என் வளர்ப்புத் தந்தை......அருந்தவப் பெரியோர்......துறவியார்... அன்னை போன்றார்......என்னை விட்டுப் பிரிந்தார். "கண்ணிலான் பெற்று இழந்ததைப்போல்" வாடி வருந்தினேன். இத்தனை நாளாக குழந்தைபோல் காத்துவந்த அந்தப் பெரியாரையும் கடவுள் அழைத்துக்கொண்டார். என் செய்வேன்! இக் கோலம் பூண்டேன்! தாயே! இதுவே என் சரிதம்" எனக் கூறி முடித்தார் அவர். தம்பூரா அவரையும் அறியாமலே கீழே விழுந்தது. கண்களில் நீர் தாரைதாரையாய் மலையருவிபோல் ஓடியது.

"......என்...ன!......அத்தானு......!......அத்தை......மக...ளு...! நீங்கள்! நான் கொடுத்துவைக்காத பாவி! உங்களுக்கா இந்தக் கோலம்! இக் காட்சியைப் பார்ப்பதற்கா இத்தனை நற்சகுனங்கள......?" என்று துடித்தாள். அவள், இருதயம் வெடித்துவிடும்போ லிருந்தது.

"மரகதமா! நீயா!! அத்தை மகளா! ஆ! அடுத்த ஜன்மத்திலாவது சந்திப்போம்......!" என்று அவர் அவள் காலடியில் வீழ்ந்தார்......!

"அத்தை மகனே குமாரா...!" என அலறினாள் அவள்.

மணி ஒளி இழந்தது!
தந்தி ஒலி இழந்தது!
ஓடு காசு இழந்தது!
அமைதி! அமைதி!! அமைதி!!!

# பிரஞ்சிந்தியா

(மு. த. வேல[illegible])

பிரிட்டிஷ் இந்தியாவின் சரித்திரத்தைப்போல் பிரஞ்சிந்திய சரித்திரத்தை விரிவாக எழுதப்பெறும் வாய்ப்பு பிரஞ்சிந்தியர்களின் துரதிர்ஷ்டமேயாகும். இக் குறையை நிவர்த்திப்பான் வேண்டி, புதுச்சேரியில் அரசாங்க நூல் நிலயத்தின் பொறுப்பாளராயிருக்கும் ஆன்ரி தெக்குளோசே தெர்ரி என்பவரால் பிரஞ்சிந்திய சரித்திரம் பற்பல தஸ்தாவேசுகளின் ஆதாரவைக் கொண்டு பிரஞ்சுப் பாஷையில் வெளியிட்டிருக்கிறார். அந் நூலுக்கு அச் சமயம் 'கொலேழ் கொலோனியால்' என்னும் அரசாங்க உயர்தர கல்லூரியில் பேராசிரியராகவும், இப்போது பிரஞ்சிந்தியக் கல்வி விலாகாத் தலைவருமான பி. ழொசலேன் என்னுந் துரைமகனார் முகவுரை தந்து அலங்கரித்திருக்கின்றார்.

அப் புத்தகத்தின் உதவியைக் கொண்டு இக் கட்டுரையை எழுதத் தொடங்குகின்றேன்.]

பிராஞ்சிந்தியா நிலப் பரப்பை நோக்குமிடத்து ஐந்து பிரிவாகப் பிரிக்கப்பட்டிருக்கிறதை எல்லோரு மறிவர். அவை புதுச்சேரி, காரைக்கால், மாயே, ஏனம், சந்தாநாகூர் என்பனவையாம்.

## பிரஞ்சிந்தியா உற்பத்தி

பிரஞ்சுக்காரர்கள் முதன்முதலில் 1664-ம் வருடம் செப்டம்பர் மாதம் முதல் தேதியில்தான், இந்தியாவில் 'பிரஞ்சுக் கீழ்த்திசைக் கம்பெனி' யென்று ஒன்றை ஸ்தாபகஞ் செய்தனர். அக் காலத்திலேயே போர்த்துகீசரும், ஆங்கிலேயரும் தங்கள் வியாபாரத்தை நடத்தி வந்திருக்கின்றனர். பிரஞ்சுக்கம்பெனி 15,000 பங்குகள் கொண்ட 150 லக்ஷம் லீவர் தொகையை மூலதனமாக ஏற்படுத்தியது. முதலில் அக் கம்பெனிக்கு நஷ்டம் ஏற்பட்டதன்மை யெனினும், 1685-ம் வருடம் பிப்பரவரி மாதம் 24-ந் தேதி ஏற்பட்ட சட்டத்தால் 12 அதிகாரிகளை யேற்படுத்திக் கம்பெனியைப் பலப்படுத்தினார்கள்.

இஃது இவ்வாறிருக்க, 1785-ம் வருஷத்தில் மற்றோர் கம்பெனியை 2 கோடி லீவர் மூலதனத்துடன் தோற்றுவித்தார்கள். அது பிரஞ்சுப் புரட்சி காலம் வரையில்தான் நடைபெற்றது.

1790-ம் வருடம் பிப்ரவரி மாதம் 22-ந் தேதியில் புதுவைக்குப் பிரான்சு தேசத்திலிருந்து ஒரு நல்ல செய்தி வந்தது. பிரான்சில் குடியரசு ஸ்தாபனத்தின் செய்தியே அதுவாகும். உடனே புதுவை வாசிகள் ஆனந்தங் கொண்டார்கள். புதுவை பிரபலஸ்தர்கள் ஒன்று சேர்ந்து பொதுக் கூட்டங் கூடி குடியேற்ற நாட்டு மகாசபை ஒன்றை ஏற்படுத்தினார்கள். அதில் காரியக் கமிட்டி ஒன்றேற்படுத்திப் பிரஞ்சி தேசிய மகா சபையிடம் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொண்டார்கள். தங்கள் குறைகளை எடுத்துக் காட்டிப் பரிகரிக்கும்படி கேட்டுக்கொண்டனர். ஐந்து ஊர்களிலும் 21 பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தனர். புதுச்சேரியில் 15, சந்தாநாகூரில் 3, காரைக்கால், மாயே, ஏனம் முதலிய ஊர்களில் ஒவ்வொருவர். இவர்களே எல்லா நன்மைகளையும் புரிந்து வந்தனர்.

பிரஞ்சுக் கிழக்கிந்தியக் கம்பெனி இந்தியாவில் 126 வருட காலம் விசேஷ உரிமையை அநுஷ்டித்து வந்தது. 1790-ம் வருடம் ஏப்ரல் மாதம் 5-ந் தேதியில் அவ்வுரிமை ரத்து செய்யப்பட்டது. இந்தியாவில் பிரஞ்சிந்தியர்கள் ஒவ்வொருவரும் தங்கள் இஷ்டப்படி சுதந்தரத்துடன் வியாபாரம் நடத்தலாம் என்ற உத்திரவாயிற்று. அது பிரஞ்சு தேசத்தில் நடைபெற்ற புரட்சியின் பலனாகும்.

பிரஞ்சு வர்த்தகக் கம்பெனி, அக் காலத்தில்தான் ஆர்க்காட்டு நவாப் பிடம் புதுவையிலேயே ரூபாய் அடித்துக்கொள்ள உத்திரவு பெற்றுக் கொண்டது. இந்த உத்திரவு, அப்போது தக்ஷிணத்தின் ராஜப் பிரதிநிதியாய் இருந்த முகமத் ஷாவால் 1736-ல் அங்கீகரிக்கப்பட்டது.

அப்போது புதுவையில் ரூபாய் அடித்த இடம், இப்போது இருக்கும் பொது மராமத்து இலாகாக் கட்டிடத்தில் என்றறியவேண்டும். துய்மா என்னும் அறிஞர் நாணயம் அடிக்கும் மாளிகை என்னும் பெயருடன் அக் கட்டடத்தைக் கட்டினார். பொது மராமத்து கட்டடத்திற்கு அருகே, இன்றும் தங்கசாலைத் தெரு ஒன்று பேர் மறையாமல் இருந்துவருகிறது.

## புதுச்சேரி

மொகலாய சக்கரவர்த்தியாகிய அவுரங்கசீப் பிரஞ்சுக்காரர்களுக்கு வியாபாரஞ் செய்வதற்காக 1666-ம் வருடம் செப்டம்பர் மாதம் 4-ந் தேதியில் சூரத்திற்கு நான்கு மைலுக்கப்பாலுள்ள சுவாலி (Sovaly) என்னும் ஊரில் ஓர் இடம் விட்டான். டச்சுக்காரர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்குஞ் செய்த அநுகூலத்தையே இவர்களுக்கும் புரிந்தான். பம்பாய் ராஜதானியில் சுவாலி என்னும் இடமே பிரஞ்சுக்காரர்களுக்கு இந்தியாவில் முதல் வியாபார ஸ்தலமாகும். இரண்டு வருடஞ் சென்று சூரத்திலேயே வியாபார ஸ்தலம் நிலைநாட்டப்பட்டது. அப்போது பிரஞ்சுக்காரர்களின் வியாபாரம் வங்காளம், ஒரிஸா முதலிய தேசங்களில் பரவிற்று.

1670-ம் வருஷம், மலையாளக் கரை ஓரத்தில் தெல்லிச்சேரி, ராஜப்பூர் ஆகிய இடங்களில் கண்ணனூர் அரசனின் அனுமதிப்படி வியாபார ஸ்தலம் உண்டாயிற்று.

மூன்று வருடஞ் சென்றபின், பீஜப்பூர் அரசனுக்காக ஷேர்கான் லூதி (Sher Khan Loudi) செம்படவர்கள் வாழும் ஓர் சிற்றூரை அளித்தான். அதுவே புதுச்சேரி. முப்பத்துமூன்று வருஷ காலங்களில், கவர்னராயிருந்த பிரான்சுவாமர்த்தேன் என்பவரால் வியாபாரத்திற் சிறந்த ஓர் பட்டணமாக்கப்பட்டது.

புதுவையை டச்சுக்காரர்கள், ஆங்கிலேயர்கள் ஆகியோர் எல்லோரும் முற்றுகையிட்டனர். 1793-ம் வருடத்திலிருந்து 1816-ம் வருடம்வரையில் புதுச்சேரி இங்கிலீஷ்காரரிடம் இருந்தது. 1816-ம் வருடம் டிசம்பர் மாதம் 4-ந் தேதியில் நிரந்தரமாகப் புதுச்சேரி பிரஞ்சுக்காரர்களுக்கே கிடைத்தது.

ஊக்ளி, டாக்கா, காசிம்பஜார், பாலசூர் முதலிய ஊர்களிலும் பிரஞ்சுக்காரர்களுக்கு வியாபார ஸ்தலம் ஏற்பட்டது.

புதுச்சேரியில் அக்காலத்திற் பெரிய கோட்டை இருந்ததை இன்றும் சிற்சில குறிகளால் கண்டுணரலாம். அக் கோட்டையைக் கட்டுவதற்கு

ரர்கள் தேவையாயிருந்தன. புதுவைக்கு வடக்கில் காலாப்பட்டு என்ற ஓர் கிராமம் உண்டு. அக் கிராமத்தைச் சுற்றி காடுகள் இருந்தபடியால், அவுரங்கசீப் பிரதிநிதியான நவாப் தாவுத்கான் மூலம் பிரஞ்சுக்காரர்கள் அவ்வூரைப் பெற்றார்கள். அதே காலத்தில்தான் உழவர்கரை (Oulgaret) என்னும் ஊரும் அளிக்கப்பட்டது. அந்த ஊரிலிருந்து வருஷ வருமானம் சுமார் 1000 விராகன் கிடைத்தனவாம். இன்னும் முருங்கப்பாக்கம், ஒலந்தை, பாக்கமுடையாம்பட்டு, கார்வாடிகுப்பம் முதலிய ஊர்களும் கிடைத்தன.

1705-ம் வருஷத்தில் புதுவைக்கும் அரியாங்குப்பத்திற்கும் இடையே உள்ள முருங்கப்பாக்கத்தைச் சுற்றி இருந்த மூன்று கிராமங்களையும் பிரஞ்சுக்காரர்கள் பெற்றார்கள். 1741-ம் வருடம் ஆர்க்காட்டு நவாப்பிடமிருந்து அர்ஷவாக்கம், தேகுவாகத்தம் முதலிய ஊர்களை சந்தா சாயப்பின் மனைவி, மகன் ஆகிய இவர்களைக் காபந்து செய்ததின் பேரில் நன்றி விசுவாசமாகக் கொடுக்கப்பட்டன.

தூப்ளேக்ஸ், முஜபர்ஜிங் என்பவனுக்காக நாஜர்ஜிங் என்பவனைத் தோற்கடித்து வெற்றிகொண்டபோது சந்தோஷத்தின் அறிகுறியாக வில்லியனூர், பாகூர் சீமையிலுள்ள 36 கிராமங்கள் முதலியன 1750-ல் கொடுத்தார்கள். அந்தக் காலததில்தான் கிருஷ்ணா நதியிலிருந்து கன்னியாகுமரி வரையிற் பிரஞ்சு அரசாட்சி நிலவிற்று. புதுச்சேரியில் அடிக்கும் நாணயங்களைக் கர்நாடகம், மசூலிப்பட்டணம் முதலிய ஊர்களில் செல்லும்படிச் செய்தார்கள்.

புதுச்சேரி 1816-ம் வருஷம் டிசம்பர் மாதம் 4-ந் தேதியிலிருந்து பிரஞ்சுக்காரர்கள் வசம் இருந்து வருகிறது.

## காரைக்கால்

இந்த ஊர் 1739-ம் வருஷத்திலிருந்து பிரஞ்சுக்காரர்கள் வசம் இருந்து வந்தது. 1760-ம் வருடம் ஏப்ரல் மாதம் 5-ந் தேதி ஆங்கிலேயர் வசம் ஆயிற்று. 1763-ம் வருஷம் பாரீசில் நடைபெற்ற ஒப்பந்தத்தின் பேரில் மீண்டும் காரைக்கால் பிரஞ்சுக்காரர்களுக்குக் கிடைத்தது. 15 வருடம் சென்றபின் மறுமுறையும் ஆங்கிலேயர் வசம் சிக்கிக்கொண்டது. 1817-ம் வருஷம் ஜனவரி மாதம் 14-ந் தேதி இறுதியாகப் பிரஞ்சுக்காரர்களுக்கே உரிமையாயிற்று.

1739-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 14-ந் தேதி காரைக்கால் கர்க்களான்சேரி அதைச் சேர்ந்துள்ள ஐந்து கிராமங்களை கவர்னராயிருந்த தூமாஸ் என்பவர் காலத்தில் அளிக்கப்பட்டன. இந்த ஊர்களுக்காகத் தஞ்சாவூர், திருச்சினாப்பள்ளி ஆகிய ஊர்களுக்கு நவாபும், முகலாய சக்கரவர்த்தியின் படைத் தலைவனுமான சந்தா சாயபு அனுமதியின் பேரில் தஞ்சாவூர் அரசன் சரபோஜி என்பவனுக்கு 50,000 சக்கரம் (ஒரு சக்கரம் 3¼ அணா இன்னும் திருவாங்கூரில் இந்த நாணயம் வழங்குகிறது) கிரயம் கொடுக்கப்பட்டது. அன்றியும் 150,000 சக்கரம் மூன்று வருட தவணைக்குக் கடனாகக் கொடுத்து உதவினார்கள்.

தூப்ளேக்ஸ் செல்வாக்குற்றிருந்த காலத்தில் முஜபர்ஜிங் என்பவன் தூப்ளேக்ஸ் செய்த உபகாரத்திற்கு நன்றி செலுத்தவேண்டி காரைக்கால் பக்கத்தில் இன்னும் சில ஊர்களைத் தந்தான்.

காரைக்கால் நிர்க்கமாய்ப் பிரஞ்சு அரசாட்சிக் குட்பட்டது 1817-ம் வருஷம் ஜனவரி மாதம் 14-ந் தேதி.

சந்தரநாகூர்

கவர்னர் பிரான்சுவாமர்த்தேன் காலத்தில் மங்கோலிய ராஜப் பிரதிநிதியிடம் ஊக்ளி, டாக்கா, காசிம்பஜார், பாலசூர் முதலிய இடங்களில் வியாபார ஸ்தலங்க ளமைக்கப் பிரஞ்சுக்காரர்கள் உத்திரவு பெற்றார்கள். ஊக்ளியில் நடைபெற்ற வியாபார ஸ்தலத்தை, பல சௌகரியங்களை முன்னிட்டு சந்தரநாகூரில் 1690-ம் வருடம் மாற்றப்பட்டது. இவ் வூர்களெல்லாம் புதுச்சேரி கவர்னர் அதிகாரத்தின் கீழ் இருந்தன. ஆதலால் 1690-ம் வருடந்தான் சந்தரநாகூர் முதன்முதலில் பிரஞ்சுக்காரர்கள் வசம் ஆயிற்று.

1757-ம் வருஷம் மார்ச்சு மாதம் 23-ந் தேதி இவ்வூர் வாஸ்டன், கிளைவ் முதலியோர்களால் பிடிக்கப்பட்டு ஆங்கிலேயர் வசம் ஆயிற்று. பின் பிரஞ்சுக்காரர்களிடம் வந்து 1778-ம் வருடம் மீண்டும் ஆங்கிலேயரிடஞ் சிக்கிக்கொண்டது. ஆனால் 1815-ம் வருடம் டிசம்பர் மாதம் 4-ந் தேதியில் நடைபெற்ற பாரீஸ் உடன்படிக்கையினால் பிரஞ்சுக்காரர்களுக்கே உரிமையாயிற்று.

சந்தரநாகூர் என்ற பதத்தைச் சிலர் சந்தனநகர் என்றும், வேறு சிலர் சந்திரநகர் என்றும் பிரித்துக் கூறுகிறார்கள்.

சந்தரநாகூர் 1816-ம் வருடம் டிசம்பர் மாதம் 4-ந் தேதியில்தான் பிரஞ்சுக்காரர்கள் வசம் நிர்க்கமாய்க் கிடைத்தது.

மாயே

மாயே ஆற்று ஓரத்தில் பிரஞ்சுக்காரர்கள், வியாபார ஸ்தலம் ஏற்படுத்தத் தீர்மானித்தார்கள். அப்போது கம்பெனியின் அதிபதியா யிருந்த மொல்லாந்தேன் என்பவர் பயானர் அரசனிடமும் அவனது சகோதரனிடமும் வியாபார ஸ்தலம் அமைக்க இடங் கேட்டனர். அப்படியே 1721-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 2-ந்தேதி ஏற்பட்ட உடன்படிக்கை மூலம் ஆறு சங்கமம் ஆகும் இடத்தில் இடங் கொடுக்கப்பட்டது. அதுவே மாயேவின் உற்பத்தி. 1761-க்குப் பின் மாயே ஆங்கிலேயர் வசம் அகப்பட்டுக் கொண்டது. 1765-ல் பிரஞ்சுக்காரர்கள் வசம் அடைந்தது. மீண்டும் ஆங்கிலேயர்கள் 1779-ம் வருஷம் மாயேவைப் பிடித்துக்கொண்டு 1785-ம் வருஷம் வரையில் தங்கள் ஆட்சியில் சேர்த்து வந்தனர். ஆனால் இறுதியில் 1817-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 22-ந்தேதியிலிருந்து பிரஞ்சுக்காரர்களுக்கே உரிமையாயிற்று. மாயே மலையாளக்கரையில் ஓர் சிறந்த வியாபார ஸ்தலமா யிருந்தாலும், அதிலும் கள்ளிக்கோட்டைக்கு அடுத்திருப்பதிலும், எவ்வாற்றானும் அபகரிக்க ஆங்கிலேயர் எண்ணியதன்றி அஃது நிறைவேறவில்லை.

1817-ம் வருடம் பிப்ரவரி மாதம் 22-ந்-தேதி மாயே பிரஞ்சு அரசாட்சியின் கீழ் நிர்க்கமாய்ச் சேர்க்கப்பட்டது.

ஏனம் (Yanaon)

ஏனத்தில் வியாபாரஸ்தலம் 1731-ல் தான் ஏற்பட்டது. 1750-ம் வருஷம் ஏப்ரல் மாதம் நிஜாம்-உல்-முல்கின் இரண்டாவது குமாரன் நாஜர்

ஹில், பிரஞ்சுக்காரர்கள் வசமிருந்த மசூலிப்பட்டணம், ஏனம் இவைகளைப் பிடித்துக் கொண்டான். ஆனால் இவ்வூர்கள் அவனிடம் நிலைத்து நிற்க வில்லை.

துய்ப்ளேக்ஸ் இரண்டு கப்பலில் 200 ஐரோப்பிய போர்ச் சேவகர்கள், 300 சுதேச சேவகர்கள் உள்பட சென்று ஏனத்தைக் கைப்பற்றிக் கொண்டார். ஆனால், வழக்கம்போல் பிரான்ஸில் குடியரசு புரட்சி ஏற்பட்டு அலங்கோலப்பட்டிருந்த காலத்தில் எல்லா ஊர்களையும் பிடித்துக்கொண்டனர்.

ஏனம் கடைசியாய்த் தீர்க்கமாக 1817-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 12-ந்தேதி பிரஞ்சுக்காரர்களுக்கு உரிமையாயிற்று.

## அருஞ்சேவை செய்த இந்திய பிரமுகர்கள்

தானப்ப முதலியார்:—17-ம் 18-ம் நூற்றாண்டில் பிரஞ்சிந்திய சரித்திரத்தில் பிரகாசித்த பிரமுகர்கள் அநேகர். பிரான்சுவா மர்த்தேன் 1674-ம் வருடம் ஊத் மாதம் புதுச்சேரிக்கு வந்தபோது, சென்னைப்பட்டணத்திற் கடுத்த பூந்தமல்லியில் வசித்து வந்த தானப்ப முதலியார் என்பவர் பெரிதும் ஒத்தாசை புரிந்தவராவார். அவர் போர்த்துகீசிய பாஷை நன்றாய்ப் பேசுவார். புதுச்சேரியைச் சுற்றியுள்ள கிராமங்களில் உற்பத்தியான பற்பல சரக்குகளையும், துணிகளையும் தானப்ப முதலியார் சேகரித்து ஏற்றுமதி செய்து கம்பெனிக்குப் பெருத்த ஆதாயத்தைத் தேடினார். அவர்தான் புதுச்சேரியில் 1684-ம் வருஷம் சேன்லஜார் என்னும் பெயருடைய ஆலயத்தைக் காட்டினார். அப்போது கிறிஸ்தவராக ஆய்விட்டார். 1691-ம் ௵ மே மாதம் 5-ந்தேதி சென்னையில் காலஞ் சென்றார். இவர் அகம்படிய முதலியார் வகுப்பைச் சேர்ந்தவர்.

தானப்ப முதலியார் குமாரர் முத்தியப்ப முதலியார் வியாபாரத்தை நன்றாய்ப் பெருக்கி வந்தார்.

நைனாப்பிள்ளை. பிரான்சுவா மர்த்தேன் காலத்திற்குப் பின் எபேர் என்பவர் புதுச்சேரி கவர்னராய் வந்தார். இவர் சுயகாரியப் புலி. அவர் முத்தியப்ப முதலியாரைப் பிரஞ்சுக் கம்பெனி ஏஜண்டு வேலையிலிருந்து நீக்கி நைனாப்பிள்ளை யென்பவரை அவ் வேலையில் நியமித்தார். முத்தியப்ப முதலியார், கம்பெனி சரப்பவழங்களைக் குறைந்த விலைக்கு விற்றதாகக் குற்றஞ் சாட்டினதை முன்னிட்டே நைனாப்பிள்ளையை ஏஜண்டு பதவியில் அமர்த்தியதாகக் கூறினார்கள். உண்மை அப்படியல்ல. புதுச்சேரி கவர்னராயிருந்த எபேர் என்பவர் சென்னையில் தன் பிள்ளையுடன் கம்பெனி கூட்டாளியா யிருக்க நைனாப்பிள்ளைக்கு அந்த இடத்தைக் கொடுப்பதற் காகும். இவ்விதமெல்லாம் செய்த கவர்னர் எபேரை பிரஞ்சுக்கு அழைத்துக் கொண்டார்கள். அவரே மறுமுறை, பிரஞ்சு தேசத்தின் சேனாதிபதி யென்னும் பட்டத்துடன் புதுச்சேரிக்கு வந்தார். அப்போது ஏஜண்டாக இருந்த நைனாப்பிள்ளையிடம் 10,000 ரூபாய் சன்மானமாகக் கேட்கப்பட்டது. அவர் மறுக்கவே, அவரை வீண் வழக்கில் சிக்க வைத்தார்கள். சிறையில் 1717-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 8-ந்தேதி காலஞ் சென்றார்.

கைனுப்பிள்ளையின் மூத்த குமாரர் பாரீசுக்குச் சென்று தன் தகப்பனர் பேரில் அநியாயக் குற்றஞ் சாட்டப்பட்டதென்று முறையிட்டுக் கொண்டார்.

பிரான்சில் பாதிரிமார்கள் பள்ளிக்கூடத்தில் வாசித்து ஷெவாலியே தெ சேன் மிஷேல் (Chevalier de Saint Michel) என்னும் உயர்ந்த பட்டத்தைப் பெற்றுக்கொண்டு, பிரஞ்சிந்திய கம்பெனியின் ஏஜண்டாகத் திரும்பினர். அத்துடன் பல்லக்கு வைத்துக்கொள்ளும் விசேஷ உரிமையும் பெற்றார்.

கனகராய முதலியார். தானப்ப முதலியார் பேரப்பிள்ளை கனகராய முதலியார். அரசியலில் இரண்டு மகத்தான சேவை செய்திருக்கிறார். ஆர்க்காட்டு நவாபிடம், நவாப் தலை போட்ட ரூபாய் அடித்துக்கொள்ள உத்திரவு பெற்றார். இரண்டு வருஷ காலமாய் எடுத்துக்கொண்ட பிரயாசையின் பேரில் தஞ்சாவூர் மன்னனிடம் காரைக்காலையும் அதைச் சேர்ந்த கிராமங்களையும் கிரையமாகப் பெற்றார்

இவர் செய்த சேவையைப் பாராட்டு முகத்தான் சன்மானமாக அவர் காலம் வரையிலும் அவர் பிள்ளைகள் காலம் வரையிலும் ரூபாய்கள் அடிப்பதில் 1000த்தில் ½ ரூபாய் வீதம் தரும்படி அதிகாரிகள் திட்டஞ் செய்தார்கள். அன்றியும், புதுவைக்கு வடக்கேயுள்ள ஆலங்குப்பம் கிராமத்தையும் அவர்க் களிக்கப்பட்டது. அவர் காலத்தில் புதுவைக்கு மூன்று மைலுக்கப்பாலுள்ள ரெட்டியார் பாளையத்தில் மாதாகோயில் ஒன்று கட்டப்பட்டது. 1746-ம் வருடம் பிப்ரவரி மாதம் 12-ந் தேதி காலஞ் சென்றார். புதுச்சேரி வழக்கறிஞர்கள் சங்கத்தின் தலைவராயிருந்த ஞானதியாகு முதலியார் அவருடைய வழித்தோன்றல்களில் ஒருவராவார்.

ஆனந்தரங்கப் பிள்ளை:—சென்னைப் பட்டணத்திற் கருகேயுள்ள பெரம்பூரிற் பிறந்தவர். நைனுப் பிள்ளையின் சகோதரர் புத்திரராவர். மிகுந்த திறமைசாலி. கவர்னர் லெனுவார் என்பவர் இவரைப் பரங்கிப்பேட்டை வியாபார ஸ்தலத்திற்கு ஏஜண்டாக நியமித்தார்கள். நீலப் புடவை வியாபாரம் ஒங்குவதற்காகத் தன் செலவில் ஆர்க்காடு, லால்பேட்டை ஆகிய இவ் வூர்களில் கடை திறந்தார். நல்ல பலன் அளித்தது. ஆனந்தரங்கப் பிள்ளை திவான் பட்டம் பெற்றார். இறுதியில் அப் பதவியிலிருந்து விலக்கினர்கள். பின், பல காரணங்களினுல் க்ஷீணதிசை யேற்பட்டது. 1756-ல் இருந்து 1761-ம் வருடம்வரையில் நிர்ப்பாக்கியமாகக் காலந் தள்ளினர். 25 வருஷ காலம் இந்தியாவில் நடந்த வர்த்தமான விஷயங்களைப் பற்றித் தினசரி குறிப்பெழுதி யிருக்கிறார். 12 தொகுதிகளாக ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட் டிருக்கின்றன.

கனகராய முதலியார் சகோதரரின் இளைய பிள்ளை சவரிமுத்து முதலியாரும் திவான் பதவி வகித்துச் செல்வாக்குப் பெற்றிருந்தார்.

தண்டு ராமலிங்கம் பிள்ளை, விநாயகம் பிள்ளை:—பிரஞ்சிந்திய கம்பெனிக்குச் சொந்தமான இடங்களைத் தண்டு ராமலிங்கம் பிள்ளைக்கும் விநாயகம் பிள்ளைக்கும் குத்தகைக்கு விட்டார்கள். இவர்கள் பட்டாளங்களுக்கு வேண்டிய பொருள்களைச் சேகரித்துக் கொடுத்துவரும் தொழிலில் ஈடுபட்டு வந்தனர். கர்னுடக ராஜதானியில் வரி வசூல் முதலியன செய்யும் குத்தகை தாரர்களாகவும் இருந்தனர். கம்பெனியிலும் இவருக்

குக் கூட்டு உண்டு. சண்டை காலத்தில் பண உதவி இவர்களால் செய்யப் பட்டிருக்கிறது. பிரஞ்சிந்திய சர்க்கார் இவர்கள் வழித்தோன்றல்களாகிய வார்சுதாரர்களுக்கு ஓர் உதவித் தொகை அளித்து வருகிறது.

1778-ம் வருஷத்தில இரண்டாவது முறையாகப் புதுச்சேரி ஆங்கிலேயரால் பிடிபட்டபோது இராமலிங்கம் பிள்ளை மன வியாகூலமாய் இறந்தார்.

சுப்பராயப் பிள்ளை:—இராமலிங்கம் பிள்ளையின் மூத்த குமாரர் முத்து வீரசுப்பராயன் என்பவருக்கு அப்போது வயது 15. புஸ்ஸியின் கீழ் அவர் மிகவும் கண்ணியத்துடன் வேலை பார்த்து வந்தார். இவர் காலத்தில் செய்த தருமம், இன்னும் புதுவையில் ஓங்கி வருகிறது.

சுப்பராயப் பிள்ளையின் வார்சுதாரர்களில் ஒருவர் தான் தண்டு சந்திர அருணாசலம் பிள்ளை. தண்டு குடும்பத்தினர் தண்டு சுமந்து சென்ற உரிமையைத் தாமும் அனுபவிக்கும் பெருமையைப் பெற்றார். அவருக்குப் பிரஞ்சிந்திய சர்க்கார் வருஷம் ஒன்றுக்கு 2160 ரூபாய் உபகார நிதி வழங்கி வந்தது. இவர் 1940-ம் ஆண்டு ஜனவரி மாதம் 18-ந் தேதியில் தான் காலஞ் சென்றார். அவர் மனைவியார் இருக்கிறார். பிள்ளைகள் இல்லை.

அரும்பாத்த விநாயகம் பிள்ளை குடும்பத்தினர் வருஷம் ஒன்றுக்கு 315 ரூபாய் உதவி நிதி பெற்று வருகின்றனர்.

லெப்டினெண்ட் வீராசாமிப் பிள்ளை, பாவு பிரகாச முதலியார் ஆகிய இவர்கள் பிரஞ்சிந்திய சர்க்காருக்கு மிகவும் சேவை செய்தவர்கள்.

அம்பு:—ரண சிகிச்சையில் பெயர் பெற்ற அம்பு என்பவர் பிரஞ்சிந்தியாவிற்குச் சிறந்த சேவை செய்தவர். 1778-ல் புதுவையில் முற்றுகையிட்ட போது ராணுவ வீரர்கள் படுகாய முற்றனர். அவர்களுக்கெல்லாம் டாக்டர் அம்பு அன்புடனுங் கருணையுடனும் சிகிச்சை செய்தார். பின் கூடலூரில் படுகாயமடைந்த சிப்பாய்களுக்குச் சிகிச்சை செய்யும் அரிய தொண்டில் ஈடுபட்டார். அவர் வருஷம் ஒன்றுக்கு 300 லீவர் உபகாரச் சம்பளமாகப் பெற்று வந்தார்.

அவர் பேரப் பிள்ளையும், அவருக்குப் பின் வந்த பேரப் பிள்ளையும் புதுவையில் பிரபல டாக்டர்களாய் இருந்து வந்தனர்.

அப்ரஹாம் முதலியார்:—அப்ரஹாம் முதலியார் என்பவர் 1793-ம் வருஷத்தில் புதுச்சேரியை ஆங்கிலேயர் அபகரிக்காமல் காபந்து செய்வதற்கு நன்கொடை 1000 விராகன் கொடுத்தவர். இவர் செய்த உதவிக்காக அர்ஷிவாக்கம் என்ற கிராமத்தை அளிக்கப்பட்டது. அத்துடன் பொன் மெடல் ஒன்றும் வழங்கினார்கள்.

நீதாமமீயா ராஜப்ப ஐயர்:—இவர் பிரஞ்சு அரசாங்கத்தின் பிரதம துவிபாஷி. மாதம் ஒன்று 100 ரூபாய் சம்பளம் பெற்றார். அரிய சேவை செய்தவர். இவர் பேரைப் புதுவையில் ஓர் வீதிக்கு இட்டிருப்பதை இன்றுங் காணலாம்.

---

# சில அனுபவ விநோதங்கள்

[எரும்பூர் — குருஸாமி ஐயர்.]

## "செயற்கைப் பழக்கங்களும், அதனால் ஏற்படும் செலவுகளும்"

இயற்கையை அனுபவிப்பது ஓர் ஆனந்தம். அதுவே நமக்கு இன்றியமையாததுமாகும். இவைகளையெல்லாம் கடந்து சிலர் செயற்கைப் பழக்கங்கள் சில கொண்டு அதை ஆனந்தமாகவும், உயிர் வாழ்க்கைக்கு மிகவும் அத்தியாவசியமாகவும் எண்ணி அனுஷ்டிக்கிறார்கள். உதாரணமாக, புகையிலை போட்டுக்கொள்ளும் வழக்கமுடையோனை எடுத்துக்கொள்ளுங்கள். காலை எழுந்தவுடன் பல் துலக்காமல் ஒரு தடவை, காலை ஆகாரமானவுடனே ஒரு தடவை, மற்றும் மத்தியான போஜனத்திற்குமுன் 3, 4, தடவைகள், போஜனமானவுடன் ஒரு தடவை, பின்னர் இரவு சாப்பாட்டிற்குமுன் பல தடவைகள், சாடபாட்டிற்குப் பின், நடு இராத்திரியில் கண் விழிக்கும் ஒவ்வொரு சமயமும் இப்படியாக அநேக தடவைகள், கணக்கிற்குக் கொண்டு வரமுடியாத முறைகள், போடுவதும், துப்புவதுமாகக் காலங் கழிக்கிறார்கள். இதை மதிப்பிடுவோமானால், அவரவர் தினசரி ஆகார செலவிற்கு சரியாயிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. நமது தேசத்தில் ஒவ்வொருவரும் வயிறார உண்பதே கடினமாயிருக்கும் சமயத்தில் வீணாக உடல் நலங்கெட செலவு செய்யும் மடமைக்கு அனுதாபப்படுவதைத் தவிற வேறென்ன செய்யக்கூடும்.

இப் பழக்கத்தால் பற்களில் அழியாத காவி நிறம், கன்னங்களில் குழி, சாதாரண சமயத்திலும் நன்றாக உச்சரித்துப் பேச முடியாமை, தேவையான ஆகாரம் குறைவு படுதல் முதலிய கெடுதல்கள் உண்டாகின்றன. மற்றும், இவர்கள் சதா வாய் நிறைய புகையிலைச் சாருடன் இருப்பதால் முக வசீகரம், அழகு, இவைகள் வேறுபடுகின்றன. மேலும், வாய் திறந்து பேச முடியாமல் பேசவரும் அன்பர்களிடம் ஊமை ஜாடை காட்டியும், வாயைத் தூக்கிக்கொண்டு சாறு வழிந்துவிடா வண்ணமும், நாக்கு படாமலும், அரைகுறையாக வாய் திறந்து 'ழகார' சப்தத்தோடும், ஸ்வதாவான குரலில்லாமலும் பேசுகிறார்கள்.

இதுபோலவேதான் குடிகாரர்கள் நிலைமையும். ஏழை முதல் பணக்காரர் வரை சக்திக்கு ஏற்றபடி செலவு செய்து குடிக்கிறார்கள். புத்தி தடுமாட்டமடைகிறது. பல அநீதிகளுக்கும், கொலை களவுகளுக்கும் துணிச்சல் கொடுக்கிறது. கடைசியில் உடல் நலங் கெடுத்துக்கொண்டும், மானம கெட்டும் வருந்துகிறார்கள். குடியில் காபிக் குடியும் சேரும். அதுவும் பலவிதமான நீர் சம்பந்தமான வியாதிகளைக் கொடுத்து, வயதான காலத்தில் உடல் நலனைக் கெடுத்து கஷ்டப்படச் செய்கிறது. இது சிறுகச் சிறுக உடலில் வேரூன்றுவதால், ஜனங்களுக்கு இதன் தீமை தெரியவில்லையெனலாம். இக் குடி நாகரீகமாகவும், பகிரங்கமாகவும் உபயோகப்படுத்தப்படுகிறது. குடித்தால் சுறுசுறுப்பு. இல்லையேல் தலைவலி, மயக்கம், இது ஒரு வழக்கம். எவ்வளவு ஏழைக் குடும்பமானாலும், தினசரி வாழ்க்கையிலும், சுப அசுப காரியங்களிலும், காபி ஆகாரமில்லாது காரியம் நடத்துவதில்லை. இது ஓர் சம்பிரதாயமாகிவிட்டது. மற்றும், பரஸ்பர உபசார விஷயத்திலும், 'காபி சாப்பிட்டுப் போங்கள்' என்று சொல்வது நாகரீகத்தின் சிகரமாக இருக்கிறது. இயற்கையான பசும்பால் சாப்பிடுவ

தற்கும், அதை (செயற்கைக்) கஷாயமாக்கிச் சாப்பிடுவதற்கும் வித்தியாசம் தெரியாமல் இருக்கிறது. அது ஓர் பெருமை. அவ்வளவுதான்.

இவர்களெல்லாம் தேவலாமென்றாகிறது புகைக் குடிக்காரர்களை நினைத்துக்கொண்டால். இந்தப் பழக்கமும் ஏழை முதல், பணக்காரன் வரை அனுஷ்டிக்கப்படுகிறது. இதில் பீடி மைனர்களே அதிகம் துன்பம் விளைவிப்பவர்கள். எந்தக் கூட்டமானாலும், ரயில் பிரயாணமானாலும், ஹோட்டலானாலும், தெருக்களானாலும், எந்த இடமானாலும் இவர்கள் வாயில் புகை கிளம்புவது தடைப்படாது. இதற்கு ஒரு மறைவிடம் என்பதே கிடையாது. பலர் பார்க்கக் குடிப்பதே நாகரீகமென்றும், பெருமையென்றும் கருதுகிறார்கள். இதனால் பக்கத்திலுள்ளவர் அசூயைப்பட்டாலும், கஷ்டப்பட்டாலும், ரயில் பிரயாணங்களில் எதிர் பெஞ்சியில் ஸ்திரீகள் உட்கார்ந்திருந்தாலும், அவர்களுடைய புகை மண்டல சிருஷ்டி நிற்காது: பிறர் சௌகரியம் இவர்களுக்குப் பெரிதல்ல. இந்தச் செய்கை குடிக்காதவனைப் பார்த்து பரிகாசம் செய்வதுபோலக் காண்கிறது. இவ் வழக்கம் வேரூன்றிவிடுமானால், இயற்கையாக மலம் கழிவது நின்று, செயற்கை முறைக்கு இந்த புகைக் குடியின் உதவியை எதிர்பார்க்க வேண்டியதுதான். இடுப்பிலிருந்து நெருப்புப் பெட்டி எடுப்பதும் காதிலிருந்து பீடி எடுப்பதும், அதை வாயில் வைத்துக்கொண்டு கொளுத்திக் கொள்வதும், அப்போது முகத்தை சுளித்துக்கொள்வதும், பிறகு முகத்தை பலவித கோணல்கள் செய்தவண்ணம் புகைவிடுவதும், நாகரீகமென்றும், உடல் நலனுக்கென்றும் கருதுகிறார்கள், இந்த மடமையை என்னென்று சொல்வது? இதில் கஞ்சா குடிக்காரர்கள், கஞ்சா லேகியம் தின்பவர்களையும் சேர்க்கலாம்.

இந்த குடிப் பைத்தியம் கிடக்கட்டும். பொடிப் பைத்தியத்தைப் பாருங்கள். இந்தப் பழக்கம், ஜாதி வித்தியாசமில்லாமலும், தனக்குத் தாழ்ந்தவரானாலும், வியாதியஸ்தரானாலும், கருதாது சமயம் நேரின் யாசிக்கச் செய்துவிடும். மேலும் பொடி போடும்போது காணும் அங்க சேஷ்டைகள், மூகக் கோணல், இவைகளும், பொடி போட்டுக்கொண்ட பின் மூக்கொழுகும் விசித்திரமும், அதைத் துடைத்தும் துடைக்காமலிருப்பதும், வாயிருக்க மூக்கால் பேசுவதுபோல் த்வனி மாறிப் பேசுவதும், செயற்கைப் பழக்கத்தால் நிகழ்வனவல்லவா?

எந்த வியாபாரம் குறைவுபட்டாலும், லாகிரி வஸ்துக்களின் வியாபாரம் மட்டும் குறைவுபடாது. லாகிரி வஸ்துக்களை உபயோகிப்பவர்களுக்கு அதன் தீமை தெரியாமலில்லை. தெரிந்து என்ன செய்ய? விடமுடியாமை காரணம். ஆனால் சிலர் அதைப் பெருமையாக நினைத்து, தீவிர பிரசாரம் செய்யவும், தனக்குப் பிற்கால வாரிசுகளைத் தயார் செய்யவும் ஆரம்பித்துவிடுகிறார்கள்.

இயற்கை யழகும், குணமும் கெட இவர்களிடையே காணும் சேஷ்டைகளை (Photo) படம் பிடித்தால் அவை (Darvin) டார்வின் கொள்கைகளுக்கு ஏன் ஆதாரமாகமாட்டா? ஆகவே, பழக்கம் செய்துகொண்டவர்கள் போக இனி வரும் பாலர்களாவது இப் பழக்கத்தை யணுகாமலிருந்தால் நாட்டின் வருங்கால பிரஜைகள் க்ஷேமமாகவும், நல்ல புத்தியுள்ளவர்களாகவும், திடகாத்திரமுள்ளவர்களாகவும் இருக்க மார்க்கமுண்டு.

# சபரிமலை சாஸ்தா

## (வி. சங்கரய்யர்.)

ஒவ்வொரு மனிதனும் கடவுளைப் பிரார்த்திக்க வேண்டியது அவசியம். மனிதனுடைய ஹிருதயத்தில் கடவுளிருக்குமிடம் ஒன்று இருக்கிறது. திருவாங்கூர் ராஜ்யம், கடவுள் பக்தி நிறைந்த ஒரு தேசம் என்பது பார்த்தவர்களுக்குத் தான் தெரியும். அங்கு, கோவில்கள் அதிகம். அக் கோவில்களுக்குச் செல்லும் பக்தர்களும் அபரிமிதம். காலை சூரியோதத்திற்கு முன்னும், மாலை சூரியன் அடையும் சமயத்திலும், ஒவ்வொரு கோவிலிலும் ஸ்நானம் செய்து சுத்தமாக பகவானுடைய நாமோச்சாரணம் செய்யும் பக்தர்களுடைய கோஷ்டியை காண்பது நேத்திரானந்தமும் சுரோத்திரானந்தமுமாக யிருக்கும்.

திருவாங்கூர் ராஜ்யத்திலிருக்கும் சபரிமலை என்னுமிடம் ஒவ்வொரு வருஷமும் தவராமல் பல்லாயிரம் பக்தர்களை வரவழைத்துக் கொள்ளுகிறது. மணிமாலை மலைகளினுள்ளிருக்கும் ரான்னிக் காட்டின் மத்தியில் 2000 அடி உயரத்திலிருக்கிறது சாஸ்தாவின் கோவில். இது பெருந்தோடு என்னுமிடத்துக்கு 25 மைல் தென்கிழக்கில் இருக்கிறது. இந்த சபரிமலை ஹிந்துக்கள், பௌத்தர்கள் ஆகிய இரு மதஸ்தர்களுக்கும் முக்கியமானது. தவிர, எருமேலியிலிருக்கும் முகம்மதிய க்ஷேத்திரம் முகம்மதியர்களுக்கு முக்கியமானது. மூன்று மதஸ்தர்களுக்கும் இந்த சபரி மலையானது முக்கியமானது.

சபரிமலை சாஸ்தாவை தரிசிக்கச் செல்லும் யாத்திரீகர்கள் வழியில் ஜாதி மத வித்தியாசம் பாராட்டுவதில்லை. இம் மலைக்குச் செல்ல இரண்டு வழிகளிருக்கின்றன. குறுக்கு வழி இரண்டு மலைகளினூடே பத்து மைல் தூரம் காட்டில் நடக்க வேண்டும். வழக்கமாக எல்லோரும் செல்லும் மார்க்கம் மலைகளின் வழியாக முப்பது மைல் தூரம் இருக்கிறது. கோவிலைச் சுற்றியுள்ள அகழ் வனமிருகங்களை அங்கே வரவிடுவதில்லை. இந்த க்ஷேத்திரத்தில் மிருகபலி கிடையாது. கூட்டம் கூட்டமாகச் செல்லும் யாத்திரீகர்கள் ஐயனுரைத் தவிர வேறொரு நினைவுமில்லாமல் செல்வதால் வழியில் ஒருவித பயமுமில்லை.

புது நாகரீகங்களும் புது மதக்கொள்கைகளும் நாள்தோறும் வளர்ந்துகொண்டு வருகின்ற இந்தக் காலத்திலும் சபரிமலைக்குச் செல்லும் யாத்திரீகர்களுடைய கூட்டம் குறைந்ததாகக் காணோம். சபரிமலை யாத்திரை மிகக் கடுமையான பல கட்டுப்பாடுகளுக்கு அடங்கினாலே செய்ய முடியும். தினசரி காலக்ஷேபத்திற்காக ஸ்வயகாரியப் புலிகளாக வேலை செய்தும்; லௌகிக ஆடம்பரத்திற்காகவும், பண சம்பாத்தியத்திற்காகவும் தினமும் அதிக ஆவல் உண்டாகின்ற இக் காலத்தில் இரண்டு மாதம் பூராவும் பகவத் விஷயமாக எத்தனை அய்யப்பர்கள் (இது சபரிமலைக்குச் செல்பவர்களுக்குள்ள பொதுவான பெயர்) செலவழிக்

கின்றனர் என்பது மிக ஆச்சரியமேயாகும். கார்த்திகை மாதம் முதல் தேதி யன்று முதல் அய்யப்பவிரதம் ஆரம்பிக்கிறது மலைக்கு புறப்படுவதற்கு முன் நாற்பத்து ஒருநாள் இவர்கள் கடுமையான விரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். ஆகாரமோ தண்ணீரோ அருந்த வேண்டுமானால் குளிக்கவேண்டும். க்ஷௌரம் செய்துகொள்ளக் கூடாது. ஸ்திரீ ஸங்கமம் கூடாது. மனதினாலோ, வாக்கினாலோ, கர்மத்தினாலோ செய்யக்கூடாத காரியங்களை நினைக்கவோ, செய்யவோ கூடாது. எல்லோரையும் கடவுளாகவும் சகோதரனாகவும் பாவிக்கவேண்டும். எப்பொழுதும் கடவுளின் நாமத்தையே உச்சரிக்கவேண்டும். இம்மாதிரியாக 41 நாட்கள் இருக்கவேண்டும். இம்முறை தப்பி ஒருநாள் நடந்தாலும் அவன் மலைக்குச் செல்லப் பயப்படுவான். முதல் வருஷம் ஒருவன் மலைக்குச் சென்றால் பின் அவன் வருஷாவருஷம் செல்ல ஆரம்பித்து விடுவான். இது தான் சபரிமலை சாஸ்தாவின் மஹிமை. முதல் வருஷம் செல்பவன் கன்னி அய்யப்பன் என்றும், தலைவனை பெரியசாமீ என்றும், மற்றவர்களை அய்யப்பன்மாரிகள் என்றும் கூறுவர். பெரியசாமிச் சொற்படி யாவரும் நடப்பார்கள். கூட்டமாகச் செல்வார்கள். ஒரு கூட்டத்தில் சுமார் பத்தோ, பதினைந்தோ பேர்கள் இருப்பார்கள். இக் கூட்டம், இக் கூட்டத்திலுள்ள பெரியசாமீயை சபரிமலை சாஸ்தாவாக பாவித்து அவர் சொற்படி நடப்பார்கள். விரதகாலமான 41 நாட்களும் காலை மாலை இவர்கள் ஒன்றுகூடி அவரவர்கள் கிராமங்களில் சாஸ்தாவின் தோத்திரங்களை நல்ல பிரகாசத்தோடும் ஸ்வரத்தோடும் அதிக நேரம் உச்சரிப்பார்கள். இப்படியே 41 நாட்களுக்குள் இவர்களுக்கு சாஸ்தாவைத் தவிர வேறு நினைவே கிடையாது. இதன் பிறகுதான் மலையாத்திரை.

சுமார் மூன்று நான்குநாட்கள் யாத்திரை செய்த பிறகே சபரிமலையையடைய முடியும். கார்த்திகை, மார்கழி, தை மாதங்களில் பனியின் வேகம் அதிகம். அக்காலத்தில் கல்லும் முள்ளும் காட்டு மிருகங்களும் நிறைந்த அடவி வழியாக நான்கு நாட்கள் நடக்கவேண்டும். காடு, பல இடங்களில் ஏற்றமும் இறக்கமும் உள்ளதாக இருக்கும். இரவில், வழியில் திறந்த இடத்தில் தான் படுக்கவேண்டும். தனக்கு சாப்பாட்டுக்கு வேண்டிய அரிசி, உப்பு, புளி முதலியவைகளும், பாத்திரங்களும் சேர்ந்த மூட்டையை தானே எடுத்துச் செல்லவேண்டும். அய்யப்பர்கள் இதைவிட அதிகக் கஷ்டங்களையும் சந்தோஷமாக அனுபவித்துக்கொண்டு சபரிமலைக்கு வருஷாவருஷம் செல்லுவது அந்த சாஸ்தாவின் மஹிமையாலேயேதான் ஆகும். மகர சங்கராந்திதான் முக்கிய தினம். இந்த க்ஷேத்திரத்தில் ஐந்து தினங்கள் தங்கி உற்சவத்தைத் தரிசித்துவிட்டு யாவரும் திரும்பி விடுவார்கள்.

## ஸ்தல புராணம்

காலவ மஹரிஷிக்கு லீலை என்ற ஒரு புதல்வி யிருந்தாள். அவளை திருமூர்த்திகளின் அம்சமான தத்தன் என்ற தேவனுக்கு மஹரிஷி விவாஹம் செய்துகொடுத்தார். இருவரும் சுகமாக வெகு காலம் காலம் கழித்த பின் தத்தன் தபஸ் செய்யப் புறப்பட்டார். இது லீலைக்குப் பிடிக்கவில்லை. அவள் அவரைத் தடுத்தாள். அதனால் கோபங்கொண்ட தத்தன் அவளை நோக்கி, "ஹே, மஹிஷி! (மனைவியே) நீ மஹிஷி (பெண் எருமை)யாகக்

கடவாய்" என சபித்தார். அவர் சாபத்தின்படி லீலை, கரபன் என்ற அசுரனுக்குக் குமாரியாக மஹிஷ ரூபத்தோடு பிறந்தாள். பிறகு அவர்களுக்கு வேறொரு குமாரனும் பிறந்தான். இருவருக்கும் முறையே அசுரராஜன், மஹிஷி, மஹிஷன் எனப் பெயரிட்டான். இந்த மஹிஷனைத் தான் சண்டிகா தேவி கொன்றதாக தேவீ மகாத்மியத்தில் கூறப்படுகிறது. தன் சகோதரனின் அழிவைக் கேட்ட மஹிஷி பிரம்மாவை யுத்தேசித்து தவம் செய்து, "பரமசிவனும் மஹாவிஷ்ணுவும் ஒன்று சேர்ந்து ரமித்து உற்பத்தியான புத்திரன், பூமியில் ஒரு அரசனுக்கு 12 வருஷ காலம் தாஸனாக இருந்த பிறகுதான் என்னைக் கொல்லக்கூடியவனான தன்மையுடையவனாக வேண்டும்" என்னும் வரத்தைப் பெற்றாள்.

பிரம்மதத்தமான வர மஹிமையால் மஹிஷி தேவர்களை அதிகத் துன்பப்படுத்த ஆரம்பித்தாள். இதை யறிந்த விஷ்ணுவானவர், பிரம்ம சிவ சக்தியால் ஒரு சுந்தர மஹிஷத்தை சிருஷ்டிக்கச் செய்தார். மஹிஷியானவள் சுந்தர மஹிஷத்தோடு வெகு காலம் சுகமாக ரமித்து வந்தாள்.

இச் சமயத்தில் பால்கடல் கடையப்பட்டு அதிலிருந்து வெளிவந்த அமிருதத்தை மஹாவிஷ்ணு மோஹினி ரூபமெடுத்து அஸுரர்களை ஏமாற்றித் தேவர்களுக்குக் கொடுத்தார். இதை யறிந்த பரமசிவன் மோஹம் கொண்டு மோஹினியுடன் ரமிக்க ஹரிஹர புத்திரரான சாஸ்தா மார்கழி மாதமும் உத்திர நக்ஷத்திரமும் பஞ்சமி தினமும் விருச்சிக லக்னமும் கூடிய சுபதினத்தில் அவதரித்தார். பிறக்கும்பொழுதே கழுத்தில் ஒரு மணி யிருந்தது. வேட்டைக்குச் சென்ற பந்தள தேசத்து அரசன் இக் குழந்தையை பம்பாநதி தீரத்தில் கண்டான். தன் அரண்மனைக்கு கொண்டு வந்து ஜாதகர்மம் செய்து 'மணிகண்டன்' என நாமகரணமும் செய்தார்.

சரியான வயது வந்ததும் வித்யாப்பியாசத்திற்காக குருவினிடம் நமது மணிகண்டன் அனுப்பப்பட்டான். ஒரு வருஷ காலத்திற்குள் சகல வித்தைகளையும் நன்றாக அப்பியசித்து விட்டதால் குருவும் இவனைக் கடவுளின் அவதாரம் என எண்ணினார். குரு புத்திரன் அந்தக குருட)னாகவும், மூகனா (ஊமையா)கவும் இருந்தான். அதை நமது மணிகண்டன் நிவர்த்தி செய்தான். பின் ராஜதானியை யடைந்தான். அக்காலத்தில் கர்ப்பவதியான ராஜபத்தினி ஒரு புருஷப் பிரஜையைப் பிரசவித்தாள். ராஜாவும் மணிகண்டனுக்கு யுவ ராஜ்ய பட்டாபிஷேகம் செய்வித்தார் இது அந்த ராஜ்யத்து மந்திரிக்கு சம்மதமில்லை. ஆகையால் மணிகண்டனைக் கொல்ல பல வழிகளைப் பார்த்தார். ஆபிசாரப் பிரயோகம் செய்தார்; விஷம் கொடுத்தார். ஒன்றாலும் மணிகண்டனைக் கொல்ல முடியவில்லை.

முடிவாக ராஜபத்னி மூலம் மணிகண்டனைக் கொல்லத் துணிந்தார் ராஜபத்னிக்கு அதிகத் தலைவலி யென்றும் அதைக் குணப்படுத்த புலிப்பால் வேண்டும் என்றும் கூறப்பட்டது. இக் காரியம் ஒருவராலும் முடியாத காரியமேயாம். மணிகண்டன் புலிப்பால் கொண்டுவர அனுப்பப்பட்டான். இதற்குள் 12 வருஷ காலமும் ஆகிவிட்டது. காட்டில் செல்லவும் மணிகண்டனை தேவர்கள் அணுகி அவனிடம் பூர்வ விருத்தாந்தங்களைக் கூறினர். இதற்குள் சுந்தர மஹிஷமும் மஹிஷியைவிட்டு அந்தர்த்தானமாகி பரம

நிலையை யடைந்துவிட்டது. மஹிஷியும் தேவர்களை மறுபடியும் துன்புறுத்த ஆரம்பித்தாள். அன்றிரவே மணிகண்டனுக்கும் மஹிஷிக்கும் சண்டை நடக்க, மஹிஷி கொல்லப்பட்டாள். உடனே அவள் திவ்ய ரூபமடைந்தாள் சாபத்திலிருந்து விடுபட்டாள். இந்த மஹிஷியே சபரிமலையிலுள்ள 'மஞ்சமாதா'வாகும்.

வனத்திலுள்ள ஒரு பெரிய சிங்கத்தின் மீதேறி பல பெண் புலிகளோடு மணிகண்டன் பந்தள ராஜதானிக்குத் திரும்பினான். ஜனங்கள் காட்டு மிருகங்களைக் கண்டு பயந்து வீட்டினுள் ஒடியொளிந்தனர். ராஜா இவ் விஷயத்தைக் கேட்டு வெளியே வந்தார். உடனே மணிகண்டன் தன் பிதாவான ராஜாவை ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்து புலிப்பாலைக் கொடுத்தார். இச் சமயத்தில் அவ்விடத்துக்கு அகஸ்திய மஹரிஷி வந்தார். அகஸ்திய மஹரிஷி மணிகண்டனின் சரிதத்தை ராஜாவினிடம் கூறினார்.

பிறகு மணிகண்டன் விநயத்தோடு பந்தள ராஜாவினிடம் கூறியதாவது, "பம்பா நதியின் கிழக்கில் நீலி மலையிருக்கிறது. அங்கே ஒரு க்ஷேத்திரம் கட்டி என் பிம்பத்தை பிரதிஷ்டை செய்யவும். என்னுடைய இடது புறம் மஞ்சமாதாவுக்கும் கோவில் கட்டவும். என் கோவிலுக்குக் கிழக்குப் புறத்தில் பஞ்சேந்திரியங்கள் (5), அஷ்டராகங்கள் (8), திரிகுணங்கள் (3), வித்யாவித்யைகள் (2) ஆக 18 படிக்கட்டுகளைக் கட்டவும். இப் படிக்கட்டுகளைத் தாண்டி வருபவனுக்குத்தான் என்னை யடையமுடியும். ஆதியில் சபரி தபஸ் செய்த பெருமையுள்ள இடமாகையால் இதை சபரிமலை என அழைக்கவும். என் பூதகணங்களின் தலைவனை வாபரனையும் பிரதிஷ்டிக்கவும். என்னை தரிசிக்க வருவோர் பூரண பிரம்மசரியம் அனுஷ்டிக்க வேண்டும். சபரிமலையானது தேஹிகளுடைய க்ஷேத்திரமும், ஞான தேஹியும் ஆக இருப்பதால், இங்கே வருகின்ற பக்தர்கள் தன்னை மறந்து என்னிலேயே பரிபூரணமாக மனதை நிலைநிறுத்தி 18 படிகளையும் தாண்ட வேண்டும்" என அந்தர்த்தானமானார்.

அகஸ்திய முனிவரின் ஆக்ஞைப்படி க்ஷேத்திரம் முதலியன நிர்மிக்கப்பட்டன. பிம்பங்களும் பிரதிஷ்டிக்கப்பட்டன. ராஜ்ய நிர்வாகத்தைத் தன் புத்திரனிடம் ஒப்பித்துவிட்டு பந்தள ராஜா தபம் செய்ய வனத்திற்குச் சென்றார்.



# இனிய எளிமை

(ஏ. எம். ரஷீத்)

"மனித சமூகத்தைவிட்டு இந்த ஷோக்கு வாழ்வு தொலைய வேண்டும். ஷோக்கு வாழ்வில் ஏதாவது அழகிருக்கின்றதா? ஆத்மானுபவம்தான் உண்டா? மனித சமூகத்தை உருப்படுத்தும் வழிதானிருக்கின்றதா? ஒரு நன்மைகூட அதோடு சேர்வதில்லை; ஆனால், அதனால் விளையும் தீமைகளோ அனந்தம். அழிவுக்கு மிகவும் உடந்தையாக இருக்கிறது இந்த ஷோக்கு வாழ்வு. இது ஒரு 'ஒட்டுவாரொட்டி' வியாதி. அது பிடித்த மனிதன் அதன் தளையில் சிக்கிக்கொண்டு அவதிப்படுகின்றான்........"

யாரோ உலகத்தில் தோல்வியடைந்த ஒரு கிழவனின் வார்த்தைகள் போலும் இவைகள் என்று நேயர்கள் நினைக்கலாம். அப்படி கிழவனின் வார்த்தைகளாக இருந்தபோதிலும் அவைகளில் முழு உண்மையும் மறைந்து நிற்பதை நன்றாக அறிந்துகொள்ள வேண்டும்.

ஷோக்கிலிருக்கும் மனிதன் எந்த ரகத்தைச் சார்ந்தவனாக இருக்கின்றான் என்பது கண்கூடு. மனிதன் மாத்திரம் ஏன், பாபிலோன், ரோம் முதலிய ஏகாதிபத்தியங்கள் அழகாக அமைக்கப்படுவதற்குப் பதிலாக, கல்வித் துறையை அபிவிருத்தி செய்வதற்குப் பதிலாக, பாழும் டம்ப வாழ்வையே விருத்தி செய்தன. அதன் முடிவு? ஆணிவேர் பிடுங்கப்பட்டது போல அடியோடு அழிந்து போய்விட்டன.

செங்கிஸ்கான் என்ற பிரசித்திபெற்ற வீரனைப்பற்றிய சரித்திரக் கதையொன்றுண்டு. தன் படை வீரர்களிடம் டம்பம் பரவாமலிருப்பதற்காக அவன் சில பிரத்தியட்சப் பிரமாணங்களைக் காட்டுவான். தன் நண்பர்களில் அநேகரை பட்டு ஆடை அணிகளுடன் தன்னுடன் வரும்படி கூறுவான். எல்லோரும் புதர் நிறைந்த காடுகளின் வழியே போகும் பொழுது, எளிய ஆடை அணிந்து செல்பவர்களுக்குக் கஷ்டமே இருக்காது. ஆனால் அந்த ஆடம்பர ஆடை அணிந்து வருபவர்கள் பிரயாணம் முழுவதும் எல்லையற்ற அல்லல்களுக்குட்பட்டு விடுவார்கள்; பிரயாண முடிவில மிகவும் சோர்ந்து போய்விடுவார்கள். இதைக் கண்டு செங்கிஸ்கான், "டம்பத்தின் வெகுமதி!" என்று கலகலவென்று சிரிப்பான். எளிய உணவே சிறந்தது என்று நிரூபிக்கவும் அவன் ஏற்பாடுகள் செய்வான். விசித்திரமான விலையுயர்ந்த ஆகாரங்களைத் தின்பவருக்கு எப்பொழுதும் வியாதி ஏற்படும் என்பதை அவன் நேருக்கு நேரே நிரூபிப்பான்.

ஆரோக்கியமான எளிய வாழ்வு படாடோபமான ஷோக் வாழ்வை விட எவ்வளவோ உயர்ந்தது, அழகானது என்பதைத் தற்காலம் அறிவுறுத்த வேண்டி இருக்கின்றது. குடிசைத் தொழில் சாக்குகளும், மனிதன்

கையினால் செய்யப்படும் சாமான்களும் இயந்திரப் பொருள்களைவிடப் பன்மடங்கு மேன்மையாக இருப்பதை யாரும் மறுக்க முடியாது.

ஆத்யாத்மீகத் துறையிலும் சில ஜம்பமான சம்பிரதாயங்களை நுழைத்திருப்பது உலகத்திற்கே ஏற்பட்ட சாபத்தீட்டோ, என்னவோ? ஏதாவது ஓர் வழியில் ஷோக் உணர்ச்சி ஊறிவிட்டால் அது பிற நடபுடல்களுக்கும் கொண்டு போய் ஆளைத் தள்ளிவிடுமல்லவா?

தற்காலத்தில் இந்திய இளைஞர்களை இந்த 'உல்லாஸ ஷோக்' பேய் பிடித்து ஆட்டுவது இந்த தேச வாழ்வுக்கே ஹானி விளைவிப்பதாகும். ஷோக்கில் பிரியமில்லாதவர்கள் 'கட்டுப் பெட்டிகள்' என்று ஒதுக்கப்படுகின்றார்கள்! கேலி செய்யப்படுகின்றார்கள்!

உலகில் பெரிய மனிதர்களின் பாடு எப்பொழுதும் இப்படித்தான். மாபெரும் ஞானியாகிய கான்ப்-F-யூஷஸ் என்ற பெரியவரையே மீகோர்ட்டில் நிறுத்தி வைத்து வேடிக்கை பார்த்த உலகமல்லவா இது! இந்த உலகம் அப்பேர்ப்பட்ட பிளேட்டோ என்ற விற்பன்னரையே உதவாக்கரை என்று தூக்கி எறிந்து பேசி வைத்தது இதே உலகம்! அரிஸ்டிடீஸ் என்ற பெரியாரை ஓட ஓடத் துரத்தி அடித்தது!...............உயர்ந்த மனோபாவந்தானா எப்பொழுதும் வாட்டப்படுகின்றது இந்த உலகில்? ஆனால், அந்த உண்மையான ஞானிகளா இதற்கெல்லாம் அஞ்சியதே இல்லை.

எளிமையான வாழ்விடம் அருவருப்பு ஏற்படாதிருந்தால் காலடைவில் அதன் சக்தி புலனாகும்; பிறகு பக்தியும் ஏற்படும். இப்பொழுது உலகில் அறியாத்தனமான ஷோக்கிற்கும், அறிவின் பெருமையான ஆளமைக்கும் பலமான போர் நடந்துகொண்டிருக்கின்றது. உண்மையான அழகு எதிலிருக்கின்றது என்பதை சிறந்த இருதயம அறிந்துகொள்ளும். பெரிய பெரிய ஏகாதிபத்தியங்களையெல்லாம் உடைத்தெறிந்தது எது என்பதை பகுத்தறிவு சுட்டிக் காட்டும். உலகின் அழகு சாந்தமுற்றது; நடபுடலற்றது. அழகுக்கு முதல் படி சாந்த மயம்; அடுத்தபடி தெளிவு; அந்தப் படியில் எளிமைக்குப் பதிலாக ஷோக் விற்றிருந்தால் அழகு தான் தூளாக மறைந்து விடுகின்றது. திருப்தியை அளிக்கும் எளிமை வாழ்வு மங்கிவிட, ஷோக் வாழ்வு வீண் மமதையும் மிருகத் திமிரையும் பலப்படுத்துகின்றது.

ஷோக் மறையவேண்டாமா? நாமெல்லோரும் அந்தப் பிசாசை உதறித் தள்ளவேண்டாமா?...... ஷோக் மறைந்தால்தான் உலகில் உண்மையான அழகு எது என்பது நம் கண்களுக்குத் தோன்றும்.

---

# கம்பன் கற்பித்த சாபம்

(P. N. வைத்தியநாத சுவாமி, B. Sc.,)

இராவணனின் காதல் நிலையை எடுத்துக்கொள்வோம். ஒரு விதத்தில் அது காமங் கலப்புள்ளது என்று அறிஞர்கள் சொல்லலாம்; அதையும் ஏற்றுக்கொள்ளலாம்.

தங்கை சொல்கிறாள்; ஜனகன் பாவையின் ஜகன்மோகனாகாரத்தில் அறிவை இழக்கிறான் இலங்கை மன்னன். அவள்பால் மனதைப் பறி கொடுக்கிறான்; இல்லை, இல்லை ஊழ்வினையால் உயர்ந்த மன்னன் சாய்கிறான்; மாதை மனச்சிறையில் வைக்கிறான் புறச்சிறையில் கொணருமுன்.

தனக்கே உரியவள் சீதை; இவ்வாறு எண்ணுகிறான் இலங்கைநாதன். காடு நடந்த காவெக்க நம்பி; அவன் அணைப்பிலோ இக்கன்னி இருப்பது என்று எண்ணுகிறான். ஆகையால் அவளைப் போய் வஞ்சனையாகப் பற்றிக் கொணர்கிறான்.

இங்குதான் வாசகர்களுக்கு சந்தேகமெல்லாம் எழும். மாயா மானை அனுப்பி வஞ்சகம் செய்து ஏன் ஜனகன் மானைக் கொண்டுவர வேண்டும் என்று கேட்கலாம்.

தனக்கே உரியதான பொருள், அவன் அருகில் வாழக் கொஞ்சமும் அருகதை இல்லாத பொருள்;—இவ்வாறு நினைத்த பின்னும், காதல் கொண்ட அப் பொருளைக் கடிதில் கொண்டுவர இலங்கைநாதன் ஏது செய்யினும் அது அவ்வளவு இழுக்காகுமோ?

கேவலம் காம இச்சையால் மாத்திரம் சீதையைப் பற்றிக் கொணர்ந்து விடவில்லை இராவணன்; புறச்சிறை வைக்குமுன் மாதை மனச்சிறையில் வைக்கிறான்; அவளை எண்ணியே உருகுகிறான். இதுவே வீர மன்னனின் உண்மையான காதல் நிலை.

ஆனால் வாசகர்கள் கேட்கலாம்; அன்னியன் மனைவிபால் இவன் காதல் கொள்ளலாமா என்று. இதுதான் அவன் ஊழ்வினை. இலங்கை மன்னனை இழுத்து அணைந்து இன்பர்தாரானோ என்று எத்தனையோ பெண்கள் ஏங்கி நிற்கிறார்கள்; அப்படியிருந்தும் ஒருவன் சுவைத்த எச்சல் உடம்பில் இவன் காதல் அலைகள் எல்லாம் மோதுகின்றன; அவனது அனர்த்தகாலம் அல்லது வேறு என்னவென்று சொல்ல முடியும்?

சீதையை சிறை வைத்த துண்மை; ஆனால் அவள் கற்பை அழிக்க அவன் முயலவில்லை. நயத்தாலும் பயத்தாலும் அவள் மனதைத் தன்வயப் படுத்தவே முயற்சிக்கிறான் அவளை வலிய இழுத்து அணைத்திருக்கலாம்; பலாத்காரத்தால் மிருக இச்சையைப் பூர்த்தி செய்துகொண்டிருக்கலாம். ஆனால அப்படிச் செய்ய நினைக்கவும் இல்லை இலங்கைநாதன். கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐந்து சுகம் பைந்தொடி கண்ணே உளது மெய்யே; ஆனால் அவளும் ஒத்த மனதினளாய் உணர்ச்சியாய் ஈடுபடும்போதே அந்த ஐந்து சுகங்களின் ஆனந்தமுண்டு. சாமவேதம் பாடிய மன்னன் இந்த காமவேதத்தையும் நன்கு அறிவன்.

கேவல மிருக இச்சை மாத்திரம் கொண்டதல்ல இலங்கைநாதன் உள்ளம். இரு உடல் சேர்க்கை மாத்திரமல்ல, இரண்டு உள்ளங்களின் கலப்பே உண்மை இன்பமாகும். இதையெல்லாம் கலைகண்ட இராவணன் மீண்டும் வேண்டுகிறான் அவள்பால்.

இந்த அரிய உள்ளத்தை கம்பன் படுகொலை செய்துவிட்டான் தன் காவியத்தில். கம்பன் பாட்டொன்றுக்கு பல லட்சம் பொன்கள் தரலா மென்பது நிச்சயம்; ஆனால், வடநாட்டு சீதையின் கற்பினுக்குப் பெருமை தர, தமிழ்நாட்டிற்கே தகுதியானதென்று கருதப்பட்ட கொள்கைக் கார இலங்கைநாதனின் அருங்குணத்தை கம்பன் மறைத்தது மன்னிக்க முடியாத குற்றமாகும்.

இந்தப் பாட்டைக் கவனிப்போம்.

"அன்ன சாவ முளதென வாண்மையான்
மின்னு மௌலியன் மெய்ம்மையன் வீடணன்
கன்னி யென்வயின் வைத்த கருணையாள்
சொன்ன தன்டு துணுக்க மகற்றுவாள்."

இதில் வரும் அன்ன சாபம் நமது ஆராய்ச்சிக்குரியது. அதாவது பிரமன் ஒரு சமயம் இராவணனுக்குச் சாப மிட்டானாம். அவன் சம்மதியின்றி பிற மாதரை இலங்கைநாதன் தொட்டால் அவன் தலை வெடிக்குமென்று. இதற் கேற்ற மற்றோர் பாட்டைப் பார்ப்போம்.

"மேவு சிந்தையின் மாதரை மெய்தொடில்
தேவு வன்றலை சிந்துக நீதெனப்
பூவின் வந்த புராதனனே புகல்
சாவ முண்டென தாருயிர் தந்ததால்."

இந்த பிரமன் சாபத்தை விளக்கி இலங்கை வீழ, ஐந்தாம் படையாய் அமைந்த வீடணன் கன்னி உரைக்கிறான்.

வான்மீகத்தில் இவ்வித சாபத்தைப்பற்றின பேச்சே கிடையாது. முன் சொன்னதுபோல் சீதை சிறப்புற கம்பன் செய்த கற்பனை இது. அநுமனிடம் அசோகவனத்தில் தன்னிலை உணர்த்தும் சீதை இவ்வாறு பேசுகிறாள். சாபத்தால் இராவணன் தன்னைத் தீண்டான்; தன் கற்பில் பழுது இல்லை என்கிறாள் பாவை.

இராவணன் உயிரைக் கொன்றது இராமன். ஆனால் அவனது புனிதமானபுகழை இப்பாட்டு கொல்கிறது.

ஆராய்ச்சியாளர்கள் இன்று சொல்கிறார்கள். இலங்கைநாதன் தினசரி குறிப்புகள் எழுதி வந்தானாம், இன்று நாம் டைரி எழுதுவதுபோல். அதில் அவன் சீதையோடு பேசிய சந்தர்ப்பங்களையும் அதன் விளைவுகளையும் குறித்து இருக்கிறானாம். அதிலெல்லாம் காரிகையின் மனதை மாற்றவே முயன்றதாகக் காண்கிறதாம். இவ்வளவு உயரிய மன்னனின் இசைக்கோர் மாசாக நிற்கிறது இப் பாட்டு. நம் பெருமை குன்ற நம் கம்பனே கற்பனை செய்துவிட்டான்.

# பெண்ணுரிமை

(பீ. உசேன்மீர்.)

பண்டைக்காலத்திலே பலவளமும் குலவி வளர்ந்து பாலும் தேனும் பெருக்கெடுத் தோடியது நமது பாரத நன்னாட்டில். கலையும், அறிவும், வீரமும் எங்கெங்கும் பொலிந்திலங்கின. அறிவும் ஞானமும் ஆனந்த நடம் புரிந்தன. தொழிலும் வாணிபமும் எழில் பெற்றோங்கின. ஏன்? அக்காலத்தில் பெண்மை கௌரவிக்கப்பட்டது. ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாய் வாழ்ந்தனர். பெண்கள் தெய்வீகமாகப் போற்றப்பெற்றனர்.

ஔவையார், பொன்முடியார், காக்கைப் பாடினியார் போன்ற அநேக பெண்புலவர்கள் கவிமழை பொழிந்து கலைப்பயிர் வளர்த்தனர்.

அம்மட்டோ! இராஜ தந்திரிகளாய் தூது சென்றும் அறிவுரை அரசர்க் குரைத்து அமைச்சராயும் அரும்பணி புரிந்தனர். இராணி மங்கம்மாள், அஹல்யாபாய் போன்றோர் தாங்களே இராச்சிய பாரத்தை யேற்று செங்கோலோச்சி சிறந்தனர். சாந்த்பீபி, ஜான்சிபாய் போன்ற வீர மாதர்கள் போர் முனைபுக்குச் சமராடி எதிரிகளைப் புறங் கண்டனர்.

ஆனால் இன்றைய தினத்தில் நம் அருமைத் தாய் நாடோ!

"அந்நியர் செய்யும் அரசாட்சியிலே
அடிமை நாடாகவும் மிடிமை நாடாகவும்
தன் வயிற்பிறந்த மன்னுயிர்த் தொகுதியின்
அரைவயிற்றுக் காகார மின்றியும்
அரையிலுடுக்க ஆடையில்லாமலும்
துன்புற்று மாண்டு தொலையு மக்களையும்
வெளிநாடு சென்று வேலைசெய்து
கண்ணீர் விட்டுக் கதறிக் கதறித்
தற்கொலை புரிந்து சாகும் மக்களையும்."

கண்டு விசாரங் கொண்டு கை தாழ்ந்திருக்கும் காரணந்தா னென்னே? பாரத சமுதாயத்திலே மாதர் புறக்கணிக்கப்பட்டனர். அடிமைகளாய், ஆண்களின் காமக்கோட்டமாய்ச் சீர்குலைக்கப்பட்டனர். ஆதலாற்றான் பாரதத்தின் பீடும் பெருமையும் ஒடுங்கிற்று.

ஆணும் பெண்ணும் ஒரு பறவையின் இரு சிறகைப் போல்வர். அவற்றுள் ஒன்று வெட்டி யெறியப்பெறின் ஒரு சிறகைக்கொண்டே பறவை பறத்தல் இயலா தன்றோ? அதுபோன்றே ஒரு நாட்டின் முன்னேற்றமும் ஆண் பெண் இரு பாலரின் உயர்வையும் ஒத்துழைப்பையுமே பொறுத்திருக்கின்றது. இதுபற்றியே நம் தலைவர் திலகம் பண்டித ஜவஹர்லால் நேரு ஒரு சமயம் "நம் சமுதாயத்தின் பாதிப்பாகம் மற்றப் பாதியின் விருப்பு வெறுப்புக்கேற்ப உபயோகிக்கப்படும் விளையாட்டுப் பொம்மையாய் அடி-

# தமிழில் சுரம் உண்டா?

(வேலூர்-T. A. சம்பந்தமூர்த்தி ஆச்சாரியார்)



"தமிழில் சங்கீதம் உண்டா?" என்று தமிழ் இசை ஆக்கத்தை விரும்பாத சிலர் முதலில் கேட்டனர். அடுத்தபடியாக, இப்போது தமிழில் சுரம் உண்டா? சுரங்களின் ஓசையைக் குறிக்கும் சொற்கள் தமிழில் உண்டா? என்று கேட்கத் தொடங்கி யிருக்கின்றனர். சமஸ்கிருதத்தில் சுரங்களின் ஓசையைக் குறிக்கும் எழுத்துக்கள் இருப்பது போல் தமிழிலும் வல்லினம், மெல்லினம், இடையினம் என்ற பாகுபாடுடன் எவ்வித ஓசையையும் குறிக்கும் எழுத்துக்கள் உண்டு. தமிழ்மொழி இலக்கணத்தின் நுணுக்கத்தை அறிந்தார் இதை மிகத் தெளிவாகத் தெரிந்துகொள்ளலாம். உதாரணமாக, உயிர் மெய்யோடு மொழிக்கு முதலில் வல்லெழுத்துக்கள் வரும்பொழுது மிருதுவான ஓசை யுடையனவாகின்றன. (உ-ம்) சருகு, சரியாதி என்பன. ங, ஞ, ண, ந, ம, ன என்ற மெல்லெழுத்துக்களுக்குப் பின்னே வரும் க, ச, ட, த, ப, ற என்கின்ற வல்லெழுத்துக்கள் அவற்றின் வல்லோசையை இழந்து, சமஸ்கிருதத்தில் பஞ்சவர்க்கங்களில் மூன்றாவதாக வரும் எழுத்து ஓசையைப் போல ஒலிக்கின்றன. (உ-ம்.) தொண்டு, துன்பம், கந்தை என்பன. ஆய்த எழுத்திற்கும் பின்னாக வரும் வல்லெழுத்துக்கள் தம் ஓசையை இழந்து சமஸ்கிருதத்திலுள்ள ஹ என்ற எழுத்தையும் சேர்த்துக்கொண்டு மெய்யெழுத்தின் ஓசையைத் தழுவி வருகின்றன. உதாரணம் அஃறிணை இருபஃது.

---

மைப்படுத்தப்பட்டிருக்கும் பரியந்தம் நமது நாட்டிற்கு விமோசனமில்லை" யெனக் கூறியுள்ளார்.

இந்நிலையிலும், நம் நாட்டின் நல்ல காலத்தால் ஒரு பாகத்தில் வீறுகொண்டெழும் சுதந்திரப் பெண்களின் புரட்சிகரமான புதுமை யுகத் தோற்றம் கண்டு களிப் பெய்துகிறோம். தங்கள் கரங்களில் ஆண்களால் பூட்டப்பட்ட அடிமைத்தளைகள் "படீர் படீர்" எனத் தெரிக்க உடைத்தெறிகின்றனர்.

"பட்டங்க ளாள்வதுஞ் சட்டங்கள் செய்வதும்
பாரினிற் பெண்கள் [illegible] வந்தோம்
எட்டு மறிவினில் ஆணுக்[illegible]பெண்
இளைப்பில்லை காணென்று கும்மியடி."

எனக் குதூகலத்துடன் முன் வருகின்றனர்.

பெண்மை வாழ்க! பிறந்த நாடோங்க!!

வடமொழியிலுள்ள சுரங்களின் பெயர்களுக்கு, பண்டைத் தமிழர்கள் வழங்கி வந்த பெயர்களாவன:—

| சமஸ்கிருதம் | தமிழ் |
|---|---|
| ஷட்ஜமம் | குரல் |
| ரிஷபம் | துத்தம் |
| காந்தாரம் | கைக்கிளை |
| மத்திமம் | உழை |
| பஞ்சமம் | இளி |
| தைவதம் | விளரி |
| நிஷாதம் | தாரம் |
| ஆரோஹணம் | ஆரோசை |
| அவரோஹணம் | அமரோசை |
| சம்பூரணம் | பண் |
| ஷாடவம் | பண்ணியல் |
| ஔடவம் | பண்ணின் திறம் |
| சுராந்தியம். | பண்ணின் திறத்திறம். |

சிலப்பதிகாரத்தில் இதற்கு இயைந்த இசைக்குறிப்புகளிற் சிலவற்றைக் கீழே தருகிறோம்:—

ஆராய்ந்த சுதியறிதல் என்பதற்கு இளங்கோவடிகள் அருளியது:—

"பண்ணல் பரிவட் டணையாராய் தைவரல்
கண்ணிய செலவு விளையாட்டுக் கையூழ்
எண்ணிய குறம்போக் கென்று காட்டிய
வெண்வகையா லிசை யெழீஇப்
பண்வகையாற் பரிவு தீர்த்து........"

"பாவோ டிணைத விசையென்றார் பண்ணென்றார்
மேவார் பெருந்தான மெட்டானும்—பாவா
யெடுத்தன் முதலா விருநான்கும் பண்ணிப்
படுத்தமையாற் பண்ணென்று பார்."

'சரிகம பதநி' யாகிய எழிசைக்கும் பொருந்த பன்னிரண்டு கோணத்தில் ஏழு இடங் கண்டு பாடிய முறைகளை, சிலப்பதிகாரம் மேற்கோள் சூத்திரங்களால் அறிந்து தமிழர்களின் இசைத் திறமையை நன்கு அறிந்து கொள்ளலாம்.

பண்ணிசை யாழில் பன்னிரு சாங்கள்:—

"குன்றாக் குறிஞ்சிசெந் கோடா செடிலேர்தும்
வின்றார்ந்த மங்கரம் தங்கோடு—நன்றாக
கீனத்தா லேழு ரிதானத்தா வின்றியங்க
ஆனந்தி யாமென் றறி."

இவ் வுண்மைகளால் தமிழுக்கும் இசைக்கும் மிகவும் பொருந்த முண்டென்றும், தமிழ் மொழியில் இசை நுணுக்கங்களுக்குரிய வார்த்தைகளும், நாதத்தின் ஓசையைக் குறிக்கும் எழுத்துக்களும் ஏராளமாக உண்டென்றும் தமிழிசை எதிர்ப்பாளர்கள் அறிவார்களாக.

# நூதன மார்வாடி

(ஏ. ஆர். ராஜகோபாலன்.)



இப்பொழுது, பாக்கியிருந்தவர்களெல்லோரும், இவ்விருவர்களைப் பார்த்து, "உம்! ஆகட்டும். எவ்வளவு நேரம் இவளுடன் போராடிக்கொண்டிருப்பது. சீக்கிரம் பிடித்து உள்ளே தள்ளுங்கள்," என்று சொல்ல உடனே இருவரும் ரமாமணியின் கையைப் பக்கத்திற் கொருவராகப் பிடித்து தோப்பினுள்ளே இழுத்தார்கள். ஆனால் ரமாமணி அசையவில்லை. அவள் தன்னால் ஆனமட்டும் அவர்களிடமிருந்து தப்பித்துக்கொண்டு போகவேண்டுமென்ற எண்ணத்துடன் திமிறினாள். ஆனால் அவர்கள் அவளை வலியப் பிடித்து இழுக்கவே, அவள் திடீரென்று குனிந்து ஒருவனுடைய கையைக்கடித்துவிட்டாள். உடனே அவன் ஓவென்றலறிய வண்ணம் தன் கைப்பிடியை விட்டுவிட்டான். அதனால் கோபமடைந்த மற்றவன் அவள் கையைப் பிடித்து முறுக்க அவள் வீறிட்டலறினாள். அந்தக் காட்சி அப்பொழுது பயங்கரமானதாகவும், பரிதாபகரமானதாகவும் இருந்தது.

அப்பொழுது ஒருவன், அங்கு காத்துக்கொண்டிருந்த மோட்டார் டிரைவரைப் பார்த்து, "நீ போகலாம்," என்று உத்தரவிட்டான்.

உடனே தன் காரைத் திருப்புவதற்காக, டிரைவர் காரினுள் ஏறி உட்கார்ந்துகொண்டு காரைத் திருப்பினான்.

அப்பொழுது அதனுடைய விளக்கு நேராக எதிரிலிருந்த சுவற்றில் தாக்கியது.

இதைக் கண்ட வீரமார்த்தாண்டன் ஒரு பக்கமாக மறைந்துகொள்ள விரும்பினான்.

ஆனால் கால தாமதமாகிவிட்டது. டிரைவரால், அவன் மிகவும் நன்றாகப் பார்க்கப்பட்டான். அந்தக் காரின் டிரைவர், வீரமார்த்தாண்டனைப் பார்த்ததும், திடீரென்று காரை நிறுத்தி, மற்றவர்களைக் கூப்பிட்டு, "அதோ! கடவுளே! வீரமார்த்தாண்டன்! வீரமார்த்தாண்டனைப் பாருங்கள்," என்று கூக்குரலிட்டான்.

உடனே திருடர்கள் அறுவரும் திரும்பி சாரப்பலகையைப் பார்க்க, அங்கு வீரமார்த்தாண்டனின் கொடிய உருவம் கோரமாகச் சிரித்துக் கொண்டிருப்பதைக் கண்டார்கள்

உடனே அறுவரும் தங்கள் மடியிலிருந்த துப்பாக்கிகளை எடுத்து, வீரமார்த்தாண்டனைக் குறிபார்த்துச் சுட ஆரம்பித்தார்கள்.

ஆனால், வீரமார்த்தாண்டன் வேகம் அவர்களுடையதைக் காட்டிலும், அபாரமானதாயிருந்தது. வீரமார்த்தாண்டனின் கைகளில் இலங்கிய துப்பாக்கிகள் பட்டு, பட்டு என்று வெடித்தன. ஒவ்வொரு வெடியின் போதும், ஓசை மிகவும் பயங்கரமானதாக விருந்தது.

ஆம்! இப்படி வீரமார்த்தாண்டன் கருப்பு அங்கியுடனும் முகமூடியுடனும் தோன்றினால் திருடர்கள் பாடு நடுக்கம்தான்! ஏனெனில் வீரமார்த்தாண்டன் குறி எப்பொழுதும் தவறுவதே கிடையாது. வீரமார்த்தாண்டன் விரோதிகள் மீண்டும் நடக்க முடியாதபடி செய்வதற்கு வல்லமை உடையவனா யிருந்தான். அவனுடைய கைத்துப்பாக்கிகள் நெருப்பைக் கக்க வாரம்பித்தால், அப்பொழுதே, பாதி சண்டை முடிந்த மாதிரி!

தன் கைத் துப்பாக்கிகளை வேகமாகப் பிடித்த வீரமார்த்தாண்டன் முரடர்களைச் சற்றும் பச்சாதாப மில்லாமல் சுட ஆரம்பித்தான்.

இரண்டு வெடிகள் தீர்வதற்குள், அக் கும்பலில் இருவர் பிணமாகித் தரையில் விழுந்தனர்.

இந்தச் சந்தர்ப்பத்தில், ரமாமணி தப்பித்துக்கொள்ளத் தருணம் கிடைத்ததென்று ஓட ஆரம்பித்தாள்.

அவளைப் பின்தொடர்ந்து இரு முரடர்கள் சென்றார்கள். பாக்கி இருவரே கீழே நின்றிருந்தார்கள்.

ஆனால் வீரமார்த்தாண்டனின் நிலைமையும் அபாயகரமானதாகத்தான் இருந்தது. அவன் அவர்களின் இலக்குக்குத் தப்பித்துக்கொண்டே, இந்தப்பக்கத்திலும்; அந்த பக்கத்திலும் மாறி மாறிச் சுழன்ற வண்ணம் அவர்களைச் சுட்டானாகையால், அவன் இருந்த சாரப்பலகை தாறுமாறாக ஆடத் தொடங்கியது. ஆகையால் தான் நின்ற பலகையிலும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டி யிருந்தது.

அவனைச் சுற்றிலும் வெகு வேகமாகக் குண்டுகள் பறந்து வந்தாலும், அவன் இடங்கொடுத்து மெதுவாக, ஒதுங்கிக்கொண்டே யிருந்த வண்ணம் தன் தொழிலைச் செய்தான்.

அப்போது அங்கு நடந்த போர் மிகவும் பயங்கரமானதா யிருந்தது.

வீரமார்த்தாண்டன், தன் இடத்தை எளிதாகக் குறிப்பிட்டுக் கொண்டிருந்த மோட்டாரின் இரு பெருவிளக்குகளையும், இரு குண்டால் உடைத்தெறிந்தான் அப்பொழுது மீண்டும் அந்த விடத்தில், அந்தகாரம குடிகொண்டது.

மீண்டும் இரு குண்டுகளால் ரமாமணியைத் தொடர்ந்து சென்ற இருவர்களையும், குறிபார்த்து—ஆனால் ஜாக்கிரதையாக, ரமாமணியின் பேரில் படாதபடிச் சுட்டான். உடனே இருவரும் கீழே விழுந்தார்கள்.

இதற்குள் மீண்டும் நின்றிருந்த இருவர்களும் சுட்ட குண்டுகளின் மூலம் அந்தச் சாரப்பலகை ஒரே ஆட்டங் கொடுத்தது. அந்தப் பலகையின் ஒரு பக்கத்தில் நாலைந்து குண்டுகள், சேர்ந்தாற்போல பட்டனவாதலால் அந்தப் பலகையின் ஒருபாகம் தீப் பிடித்துக்கொண்டு எரிய ஆரம்பித்தது.

அதைக் கவனியாமல், வீரமார்த்தாண்டன் அவ்விருவர்களைக் குறி வைத்துச் சுட ஆரம்பித்தான்.

ஒரு குண்டு குறி தப்பாமல் ஒருவனைச் சுட்டு வீழ்த்தியது. உடனே மீதியிருந்த ஒரே முரடனும்—அந்த டிரைவரும், ரமாமணி ஓடிய திக்கில் ஓட ஆரம்பித்தார்கள்.

அவர்கள் வீரமார்த்தாண்டனை எதிர்க்க முடியாதவர்களாய் ஓடும் பொழுதுங்கூட. வீரமார்த்தாண்டன் அவர்களின் பின்புறத்தில் சுட்டு இருவரையும் கொன்று வீழ்த்தினான் !

சாதாரண சமயத்தில் ஓடுபவர்களைச் சுடாதிருப்பவனான வீரமார்த்தாண்டனுக்கு, அவனது செய்கை அவனுக்கே ஆச்சரியத்தை உண்டுபண்ணிற்று. ஆனால் கோபம் அவன் கண்களை மறைத்தது

'அந்தக் குழந்தையை கவர்ந்தபொழுது எப்படியிருந்தது! புருஷோத்தமன் மனைவியைக் கொல்ல எப்படி மனம் வந்தது!' என்று நினைக்கும்பொழுது, அவன் யுத்தத்தில் தர்மத்தையும் அதர்மத்தையும் கவனிக்கவில்லை. அவன் உடல் கோபத்தினால் கொதித்தெழுந்தது. தன்னை யறியாமல்–பழிக்குப் பழி வாங்கிய இரு துப்பாக்கிகளையும்-முத்தமிட்டுக் கொண்டான் வீரமார்த்தாண்டன்.

அப்பொழுது சாரப்பலகையின் ஓரத்தில் பிடித்திருந்த தீ, மெதுவாக இவனருகில் நெருங்கிவர ஆரம்பித்தது.

அப்பொழுது, தூரத்தில் எங்கிருந்தோ போலீஸ் ஊதுகுழல் சப்தம் கேட்டது. இதிலிருந்து இன்னும் சிறிது நேரத்தில் இங்கு போலீஸ் படை வந்து சேர்ந்துவிடும் என்று தெரிந்துகொண்டான் வீரமார்த்தாண்டன்.

உடனே கிடுகிடுவென்று தான் முதலில் ஏறிய ஏணியின் வழியாக இறங்கினான் வீரமார்த்தாண்டன். கைகளில் துப்பாக்கிகளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு கீழே விழுந்து கிடந்தவர்களைக் கவனித்தான்.

என்ன ஆச்சரியம்!

முன் பக்கத்தில் குண்டு பட்டுக் கீழே விழுந்தவர்கள் ஐவருக்கும் குண்டுகள், நடுநெற்றியிலேயே பாய்ந்திருந்தன. ஆம். அதுதானே, வீரமார்த்தாண்டனின் அடையாளம் !

ஆனால் கடைசியில் ஓடிய முரடனுக்கும், டிரைவருக்கும்—அவர்கள் ஓடியபொழுது சுட்டதால்—அவர்களின் முதுகுப்புறத்தில் குண்டுகள் பாய்ந்திருந்தன.

வீரமார்த்தாண்டனின் துப்பாக்கி ஒவ்வொன்றிலும் ஆறு குண்டுகள் இருந்தன. அவைகளில்:—

| | |
|---|---|
| 7 பேரைச் சுட்டதால் | 7 |
| மோட்டார் விளக்குகளைச் சுட்டதினால் | 2 |
| ஆக — | 9 |

குண்டுகள் போக மீதி 3 குண்டுகள் அவன் இடது கைத்துப்பாக்கியிலிருந்தன.

உடனே வீரமார்த்தாண்டன் முதுகில் குண்டு பாய்ந்திருந்த இரு பிணங்களையும் நிமிர்த்தி, அவ்விரண்டு பேர்களின் நடு நெற்றியிலும் இரு குண்டுகளைச் செலுத்தினான்.

பிறகு மீதியிருந்த ஒரு குண்டை ஆகாயத்தைப் பார்த்துச் சுட்டான் வீரமார்த்தாண்டன்.

ஆனால் வீரமார்த்தாண்டன், தான் நின்ற விடத்திலிருந்தே கண்ணுக் கெட்டிய தூரம் வரையில் பார்க்க ரமாமணியைக் காணவில்லை.

ஆனால் அவளைத் தேடுவதற்கு வீரமார்த்தாண்டனுக்குச் சமயமில்லை. ஏனெனில் எந்த நிமிஷத்திலும் போலீஸ்காரர்கள் வந்து விடுவார்கள் என்று தெரிந்திருந்தான். உடனே அவ்விடத்தை விட்டு மீண்டும் தோப்பின் வாசற்கதவண்டை வந்து, வாசற்படியின் சுவரை வெகு எளிதில் தாண்டிக் கடந்து மறுபக்கம் குதித்தான்.

அப்பொழுது அவன் மனம் மிகவும் சந்தோஷத்தை யடைந்திருந்தது.

மணிபுரத்தில் வீரமார்த்தாண்டன் கடமாட ஆரம்பித்ததின் மூலம், இப்பொழுது முகமூடி மனிதனுக்கு ஒப்பற்ற பயத்தை உண்டாக்கி விட்டான்.

இனி தான் தைரியமாக வெளியே வரும்பொழுது, முகமூடி மறைந்திருந்து அவன் காரியங்களை மெதுவாகவும் ஜாக்கிரதையாகவும் செய்யும் படியான நிலைமைக்குக் கொண்டுவந்து விட்டான்.

ஆம்! வீரமார்த்ததாண்டன் முகமூடிக்கு, தன்னிடம் பய மேற்படும் படியாகச் செய்து விட்டான்! கூடிய சீக்கிரம் இருவரும் நேருக்கு நேராகச் சந்திக்கும்பொழுது, இதைவிட பயங்கரமாகக் காரியங்களைச் செய்ய வேண்டுமென்று தனக்குள் நினைத்துக்கொண்டான் வீரமார்த்தாண்டன்.

“கூடிய சீக்கிரம் ஜனங்களும், இந்த விஷயங்களைத் தெரிந்து கொள்வார்கள்! அப்பொழுது ஏற்படும் பயத்தின் மூலம், இவ்வுலகத்தில் கள்வர்களே, இல்லாதபடி செது விடுகிறேன்,” என்று தனக்குள் நினைத்துக் கொண்டான் வீரமார்த்தாண்டன்.

அப்பொழுது இடது பக்கத்திலிருந்து பலர் விளக்குகளுடன் ஓடி வருவதையும், போலீஸ் ஊதுகுழல் சப்தம் அதிகரித்துக்கொண்டு வருவதையும் கண்ட வீரமார்த்தாண்டன் வலது பக்கமாக விரைந்து நடந்தான். அப்பொழுது அவனது கருப்பு அங்கி அவனை இருட்டோடு இருட்டாய் மறைத்தது..................

போலீஸ்காரர்களும் ஜனங்களும் வந்தார்கள். ஆனால் அவர்களுக்கு வீரமார்த்தாண்டன் இங்கு வந்திருந்தான் என்று தெரிவித்தன, பிணங்களின் நெற்றியிலிருந்த காயங்கள்!

அப்பொழுது அவர்கள் திடுக்கிட்டார்கள்! ஏனெனில் எங்கோ ஒரு மூலையில் இருந்து வீரமாரத்தாண்டனின் கோரச்சிரிப்பு காற்றுடன் கலந்து வந்தது!..........

இப்போது சண்டை சூடுபிடித்திருக்கிறது! ஏனெனில் வீரமார்த்தாண்டன் இப்போது காரியத்தில் இறங்கி யிருக்கிறான்!

## 7-வது அத்தியாயம்.

### கலவர மடைந்த மாது

சுமார் மணி 8 அடித்தபொழுது, வீரமார்த்தாண்டன் மணிபுரத்தின் ராஜவீதியில் 38-ம் நெம்பர் வீட்டினருகில் நின்று கொண்டிருந்தான்,— அதே கருப்பு உடையுடனும், அதே முகமூடியுடனும். அவன் அப்பொழுது இருட்டில் மறைந்திருந்தபடியால் அவனை ஒருவரும் கவனிக்கவில்லை.

அப்பொழுது அவன் மனதில் சரோஜாவை—டாக்டர் மாசிலாமணியின் மனைவியை—பார்க்க வேண்டுமென்று நினைத்தான். ஏனெனில் தான், மனிபுரத்திற்கு வந்ததிலிருந்து இன்னும் சரோஜாவைப் பார்க்கவில்லை! "அவளைக்கூடிய சீக்கிரம் சந்திக்கவேண்டும். அவள் அரசகேசரிக்கு அர்ஜெண்ட் தந்தி யனுப்பி விருப்பதின் மூலம் விஷயம் ஏதாவது முக்கியமாக இருக்கவேண்டும்" என்றெண்ணினான் வீரமார்த்தாண்டன்.

அப்பொழுது தெரு சந்தடியற்றிருந்தது. யாரோ ஓரிருவர் எங்கோ மூலையில் போய்க்கொண் டிருந்தார்கள்.

38-ம் நம்பர் வீடு ஒரே மாடியை உடையதாகவும், சிறிய வீடாகவும் இருந்தது. அதன் வாயிற்புறத்திலேயே மாடிக்குப் போக வழி அமைந்தது.

அதன் வழியாக, மாடியை நோக்கி நடந்தான் வீரமார்த்தாண்டன். போகும்பொழுதே ஒருவரும் கீழ்ப்பக்கத்தில் இல்லை என்பதைத் தெரிந்துகொண்டான் வீரமார்த்தாண்டன்.

மேற்படியை யடைந்ததும் மெதுவாக எட்டிப் பார்த்தான். ஒரு நீண்ட தாழ்வாரமும், வலது பக்கத்தில் ஒரு அறையும்—இடது பக்கத்தில் ஒரு அறையும் அது சமையலறையைப் போன்றிருந்தது—இருந்தன. ஆனால் தாழ்வாரத்திலும், சமையலறையிலும் ஒருவருமில்லை என்பதை ஒரே நோக்கில் பார்த்துக்கொண்டான் வீரமார்த்தாண்டன்.

அப்பொழுது பேச்சுக்குரல் வலதுபக்கத் தறையிலிருந்து வந்தது. ஆனால் அக்கதவு ஒருக்களித்து சாத்தப்பெற்றிருந்ததனால் உள்ளே யார் யார் உட்கார்ந்திருக்கிறார்களென்று வீரமார்த்தாண்டனால் எளிதில் இருந்த விடத்திலிருந்தே கண்டுபிடிக்க முடியவில்லை.

இருந்தாலும், மெதுவாகத் தான் மறைந்துகொண்டு சம்பாஷணையைக் கவனிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் சமையலறையை அடைந்தான் வீரமார்த்தாண்டன். அங்கு மெதுவாக கதவிலோரமாகச் சாய்ந்த வண்ணம் வலது பக்கத்து அறையை நோக்கக் கவனித்தான்.

இப்பொழுது அவனுக்கு உள்ளிருந்தவர்கள் நன்றாகத் தெரிந்தார்கள்!

வலது பக்கத்தறையில் மூவர் உட்கார்ந்திருந்தனர். அவர்களில் இரண்டு ஆடவர்களும் ஒரு ஸ்திரீயும் இருந்தனர். அந்த ஸ்திரீ தான் சரோஜாவாக இருக்க வேண்டுமென்று வீரமார்த்தாண்டன் எண்ணினான்.

ஆனால், அவன் ஆடவர்களின் பக்கம் திரும்பியபோது திடீரென்று வியப்படைந்தான். ஏனெனில் அவ்விரு வாடவர்களில் ஒருவர் இன்ஷியூரன்ஸ் கம்பெனி மானேஜர் சச்சிதானந்தம்.

இதிலிருந்து வீரமார்த்தாண்டன், மற்றொருவரே டாக்டர் மாசிலாமணி என்று நினைத்தான். ஆனால் அவனுக்கு ஆச்சரியம் அதிகமாயிற்று. சச்சிதானந்தத்திற்கு இங்கென்ன வேலை? நேற்றைய தினம் அங்கு நாடகக் கொட்டகையில் சந்தித்தபிறகு, இங்கேதான் மறுதடவையாக (அரசகேசரி)-வீரமார்த்தாண்டன், சச்சிதானந்தனைப் பார்க்கிறான்! இங்கென்ன அவனுக்கு வேலை யிருக்கும்!

மெதுவாகத் தன் வியப்பை யடக்கிக்கொண்டு சம்பாஷணையைக் கவனித்தான், வீரமார்த்தாண்டன். (தொடரும்.)

# “ ஆனந்தபோதினி ” பஞ்சாங்கம்.

விஷு வருஷ பங்குனிமீ—கலியுகாதி 5043, சாலிவாகனம் 1864,
பசலி 1351, கொல்லமாண்டு 1117, ஹிஜரா 1361,
இங்கிலீஷ் 1942ஆு மார்ச்சுமீ—ஏப்ரல்மீ

| பங்குனிமீ | மார்ச்சுமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | சனி | துவா 2-45 | அவி 59-0 | சி 59-0 அ | மீனரவி கா-3-53, சனிப் பிரதோஷம் |
| 2 | 15 | ஞா | திர 0-10 சது 58-25 | சத 58-53 | சித் 60 | மாச சிவராத்திரி, அவமாகம் |
| 3 | 16 | திங் | ● 57-18 | பூர 59-25 | ம 59-25 சி | சர்வத்திர அமாவாசை |
| 4 | 17 | செவ் | பிர 58-13 | உத் 60 | அமி 60 | யுகாதி பண்டிகை |
| 5 | 18 | புத | துதி 60 | உத 1-58 | சி 1-58 மர | சந்திர தரிசனம் |
| 6 | 19 | வியா | துதி 0-10 | ரே 5-30 | சி 5-30 அ | ஆண்டோளன திரிதிகை |
| 7 | 20 | வெள் | திரி 3-18 | அசு 10-10 | அ 10-10 சி | மாசசதுர்த்தி விரதம் |
| 8 | 21 | சனி | சது 7-40 | ப✻ 15-55 | சி 15-55 அ | கிருத்திகை, லட்சுமி பஞ்சமி |
| 9 | 22 | ஞா | பஞ் 13-0 | கார 22-38 | சித் 60 | சஷ்டி, கரங்கம் வெட்ட |
| 10 | 23 | திங் | சஷ் 19-3 | ரோ 29-58 | அக 60 | விவாகம், சர்வ முகூர்த்தம் |
| 11 | 24 | செவ் | சப் 25-15 | மிரு 37-15 | சி 37-15 ம | வியாதியஸ்தர் குளிக்க |
| 12 | 25 | புத | அஷ் 30-53 | திரு 44-5 | சித் 60 | அசோகாஷ்டமி |
| 13 | 26 | வியா | நவ 35-35 | புன 49-52 | அமி 60 | ஸ்ரீராமநவமி, ஸ்ரீராமஜயந் |
| 14 | 27 | வெள் | தச 38-50 | பூச 54-15 | மர 60 | தர்மராஜ தசமி [தி |
| 15 | 28 | சனி | ஏகா 40-23 | ஆயி 56-55 | ம 56-55 அ | சர்வ, மத்வ ஏகாதசி |
| 16 | 29 | ஞா | துவா 40-8 | மக 57-45 | ம 57-45 சி | வாமன, தமன துவாதசி |
| 17 | 30 | திங் | திர 38-3 | பூர 56-53 | சித் 60 | பிரதோஷம் |
| 18 | 31 | செவ் | சது 34-18 | உத் 54-23 | அ 54-23 சி | பங்குனி உத்திரம் |
| 19 | 1942ஆு ஏப்ரல்மீ 1 | புத | ப ○ 29-18 | அஸ் 50-40 | ம 50-40 ச | பௌர்ணமி, கரிநாள் |
| 20 | 2 | வியா | பிர 22-58 | சித் 45-45 | சி 45-45 அ | |
| 21 | 3 | வெள் | துதி 16-0 | சுவ 40-45 | சித் 60 | |
| 22 | 4 | சனி | திரி 9-8 | விச 35-38 | சித் 60 | |
| 23 | 5 | ஞா | சது 1-53 பஞ் 54-45 | அ 30-20 | மர 60 | |
| 24 | 6 | திங் | சஷ் 48-23 | கே 25-30 | சித் 60 | |
| 25 | 7 | செவ் | சப 42-45 | மூல 21-25 | அ 21-25 சி | |
| 26 | 8 | புத | அ 38-10 | பூரா 18-15 | அமி 60 | |
| 27 | 9 | வியா | நவ 34-10 | உத் 16-8 | சித் 60 | |
| 28 | 10 | வெள் | தச 32-10 | திரு 15-8 | ம 15-8 சி | |
| 29 | 11 | சனி | ஏகா 30-55 | அவி 15-15 | சி 15-15 அ | |
| 30 | 12 | ஞா | து 30-30 | சத 16-18 | சித் 60 | சுப முகூர்த்தம், வியாதி மருந்துண்ண |

| | | | |
|---|---|---|---|
| சூரி | | குரு சு-செ | |
| கே புத | 16-கும்ப-சுக் 19-மீன-புத | | |
| சுக் | | | ராகு |
| | | | |

...ஆனந்த காப்பக...

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAMY MUDALIAR,
AT THE “ANANDA BODHINI” PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

# சர்வமேக நிவாரணத் தைலம்




இந்தப் பிரசித்திபெற்ற இராஜ சஞ்சீவி திராவகத்தை, காலை மாலை இரண்டு வேளை களிலும் 10-நாட்கள் வரை உட்கொண்டால் வெகு நாட்களாகத் தேகத்தில் ஊறிய மேக ரோகங்கள், மேக வாய்வு, தனுர்வாதம், முழங் கால் வாதம், குதிகால் வாதம், சகலமான கடிப்புகள், மேகரோகத்தால் உண்டான வெடிப்பு இரணங்கள், குழிப் புண்கள், புரை யோடுகிற புண்கள், திமிர் வாய்வு, கைகால் விரல்களில் மேகநீர் தங்கிய நோய்கள், கிரந்தி முதலிய கிரந்திப் புண்கள், துடைவாழை படைகள், நகக்கணுநோய், சகல மூலங்கள் முதலிய ரோகங்கள், நெருப்பிலிட்ட பஞ்சு போல் போகும். இது அநேக ஜனங்களின் துன்பத்தை நீக்கிச் சௌக்கியத்தை உண்டு பண்ணி அதிக அனுபவத்திற்கு வந்தது. கடின பத்தியமின்றி, பால், நெய், கறி முத லியவைகளுடன் சாப்பிடக்கூடியதும், பேதி, இளைப்பு, ஆயாசம் முதலியவைகளை உண்டாக் காமல் சுகமாகவ் வியாதிகளைக் கண்டித்துச் சுகப்படுத்தக்கூடியதுமாகிய உண்மையான மருந்து. இதன் விலை ரூபா 1—8—0. தபாற்கூலி வேறு.

மேகரோக நிவாரணி!
தாது விருத்திக்கு நிகரற்றது!!

# எலிக்ஸ்லைரன்

மலையாள அஷ்டாங்க முறைப்படி மலையாளத்தில் தயார் செய்தது.

பத்தியம் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், தசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அதிர்வ சஞ்சீவியாகும். நாள்பட்ட வெள்ளை, வெட்டை, மேகவியாதி, துர்நீர், மூலச்சூடு, நரம்புத் தளர்ச்சி, வீரியக் குறைவு, லிங்கப் புண், லிங்கப் புற்று, மேகப் படைகள், உடம்பு ஊரல், அஜீரணம், மலச்சிக்கல், கைகால் நோவு, மயக்கம், இடுப்பு வலி, மூத்திரநோய் முதலிய எல்லாவிதமான மேக வியா திகளைப் போக்கி, புத்துயிர் அளித்து இல்லற இன்பத்தை அனுபவிக்கச் செய்து, யௌவனத்தைத் தரும்.



இம்மருந்து வெகு பிரயாசையின்பேரில் அதிகப் பணச் செலவினாலும், அநேகவிதமான மலையாள மூலிகை உலோக வஸ்துக்களைக் கொண்டும் முறைப்படி தயார் செய்தது.

இம் மருந்தை யுட்கொண்டு, தங்கள் திரேகத்தில் உள்ள வியாதியை அகற்றுங்கள். உண்மை விளங்கும். ஆண் பெண் யாவரும் சாப்பிடலாம்.

20-நாள் மருந்து 40 வேளைக்கு உபயோகிக்கக் கூடியது. பூரண குணத்துக்குப் போதுமானது. விலை ரூ. 2—4—0.

---

தனலட்சுமி கம்பெனி நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# மதன கோலாகல தங்கமாத்திரை

இம்மருந்து தாதுபுஷ்டியைத் தருவதில் நிகரற்றது. இதில கஞ்சா, அபின் முதலிய லாகிரி வஸ்துக்கள் சிறிதும் சேர்க்கப்படவில்லை. வயது முதிர்ந்த காரணத்தாலும், உலக இச்சை இல்லாதவர்களும் இழந்த பலத்தை இம்மருந்து ஆச்சரியப்படத்தக்க விதமாய் உண்டாக்கி ஒருவிதமான சுறுசுறுப்பையும் கொடுக்கும். இதுவன்றி வேறு எந்த நோயினாலுண்டான பலவீனமும் இம்மருந்தினால் நீங்கும். இரத்த விருத்தியை யுண்டாக்கி நரம்புகளுக்கு உறுதியைக் கொடுக்கும் தன்மையில் இது கைகண்ட மருந்து. வயோதிகமே தெரியாது. களைப்பும் தோன்றாது. சோர்வையும் சோம்பலையும் நீக்கித் தேக பலத்தைக் கொடுக்கும்.



இது, தங்கம், வெள்ளி, முத்து, அயம், காந்தம் முதலிய உயர்ந்த உலோகச் சரக்குகளும், சஞ்சீவிக்கு நிகரான பல மூலிகைகளும் சேர்க்கப்பட்டு சிறந்த கைபாக செய்பாகங்களாய் தயாரிக்கப்பட்டது.

இதனை ஒருமுறை வாங்கி உபயோகித்தால் இதன் மேலான குணம் தானே தெரியும். 20-மாத்திரைகொண்ட சீசா 1-க்கு விலை ரூபா 2.

# நாக்குப்பூச்சியை நாசமாக்கும் பில்லை

இந்த பில்லைகள் ஒரு வருடத்துக் குழந்தைகட்கு அரை பில்லையும், மற்றவர்கட்கு 1 அல்லது 2 பில்லைகளும் கொடுத்தால் வயிற்றிலுள்ள சிறு கிருமிகள் யாவற்றும் பந்து பந்தாய் வந்துவிடும். 8-பில்லை விலை அணா 6.

# காசா

காசம் இருமல், க்ஷயம் முதலிய வியாதிகளுக்கு தலைசிறந்த ஔடதமாகும். இம்மருந்து மலையாள அஷ்டாங்க முறைப்படி) மலையாளத்தில் அநேகவிதமான வனமூலிகை உலோக வஸ்துக்களைக் கொண்டு முறைப்படி தயார் செய்தது. குணத்தில் சிறந்தது:—

இருமல், காசம்! இளைப்பு, சளி, கபம், குரலடைப்பு, தொண்டைக் கம்மல், தொண்டை வலி, மார் தடிப்பு, வலி, க்ஷயம் முதலிய வியாதிகளை குணப்படுத்துகிறது,



மார்பிலும், தொண்டையிலும், சுவாச நாடிகளிலும், குழாய்களிலும் ஏற்படும் ரணங்களை ஆற்றி, இருமலைத் தணியச் செய்து கபத்தை அறவே ஒழித்து, சளியோடு ரத்தம் வருதல், மஞ்சள் நிறமாக வருதல், இளைப்பு காணுதல், பலஹீனம், உடம்பு மெலிதல், ஆயாசம், மூச்சுத் திணறல், கை கால் அசதி, சுவாசகாசம், ஜுரம் முதலியவைகளை குணப்படுத்தி, ரத்த சுத்தி செய்யும் என்பதை இதை உபயோகித்து உண்மை அறியவும். ஆண் பெண் யாவரும் பத்தியம் இன்றி சாப்பிடலாம்,

**30–நாள் 60-வேளை மருந்து விலை ரூபா 2—8—0.**

---

**கலைலட்சுமி கம்பெனி. நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு மதராஸ்**

## மானிடர்க்கு மகிழ்ச்சியைத்தரும்

# மகா சந்தனாதித் தைலம்

அன்பர்களே! வெயிற்காலத்திற்கு இன்பந்தரும் இந்த மகா சந்தனாதித் தைலம், சிறந்த பல மூலிகைகளாலும், உயர்ந்த சந்தனக்கட்டைச் சத்தினாலும், பசும்பால் முதலிய சிரேஷ்டமான கற்க வகைகளினாலும் சித்த ஆயுர்வேத முறைப்படி பெரும் பிரயாசையின்மேல் செய்யப்பட்டு இப்போது வெளிவந்திருக்கிறது.



நூற்றுக்கணக்கான பணச் செலவின்மேல் தீர்க்க வேண்டிய வியாதிகளை யெல்லாம், இந்த சந்தனாதித் தைலத்தினால் தீர்த்துக்கொள்ளலாம்; இதற்குப் பல கனவான்கள் அநேகம் நற்சாக்ஷிப் பத்திரங்கள் அனுப்பியிருக்கின்றனர்.

இத்தைலத்தை வாரத்திற்கு இரண்டு முறையாக, சிரசில் தேய்த்துச் சிகைக்காயிட்டு வெந்நீரில் ஸ்நானஞ் செய்து வருவதால் கண்ணெரிச்சல், கண்களில் நீர் வடிதல், காதுநோய், தலைப்பாரம், மூளைக் கொதிப்பு, ஒற்றைத் தலைவலி, மண்டையிடி, சாலேச்வரம், பித்தபாண்டு, காமாலை, அஸ்தி சுரம், நாவரட்சி, கைகால் எரிவு, தேக வெளுப்பு, மேக ரோகங்கள், அதிக வெட்டையினாலுண்டான துர்நாற்றங்கள், சொறி, சிரங்குகள், நமைச்சல், பீனிசம், கபால சூலை முதலிய வியாதிகள் நீங்கித் தேகத்திற்குச் சுகமுண்டாக்கும்; ஞாபக சக்தி அதிகப்படும்; கண்ணிற்கு நல்ல ஒளியுண்டாகும்.

இதைத் தேய்த்து நீடித்து ஸ்நானஞ் செய்து வருவதால் மூளையில் கொதிப்பு நீங்கிக் குளிர்ச்சி யுண்டாகும்; மூளை அதிர்ச்சி, தடி தடிப்பு, தலை நமைச்சல் முதலியவைகளும் நீங்கும்; மற்ற ரோகம் அறவே ஒழிந்துவிடும்; பித்தத்தினால் நரைத்த உரோமங்கள் கருமை யடையும்.

இத்தைலம் தேய்த்து ஸ்நானஞ்செய்த தினத்தன்று சீதள பதார்த்தங்களையும், தயிர் மோர் முதலியவற்றையும், பகல் நித்திரை, ஸ்திரீ சம்போகம் முதலியவைகளையும் நீக்கவேண்டும்.

இதன் விலை 1 சேர் தைலம் அடங்கிய டின் ரூபா 1–12–0

,, ½ ,, ,, 1–0–0

# இமயகிரி சஞ்சீவித் தைலம்

இது உள்ளுக்கும் மேலுக்கும் உபயோகிக்கக்கூடிய சிறந்த ஔஷதம். ஜலதோஷம், தொண்டை நோய், தலைவலி, கழுத்து நோய், ஜுரம், ஜன்னி, பிடிப்பு, வாந்திபேதி, ஈழை இருமல், இரைப்பு, அஜீர்ணம், வயிற்றுவலி முதலான வியாதிகளை உடனே கண்டிக்கும். இதன் சிறந்த குணத்தை அநுபோகத்தில் தெரிந்துகொள்ளலாம்.

புட்டி 1-க்கு விலை அணா 8. புட்டி 3-க்கு விலை ரூபா 1–4–0

---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# அயக்காந்த சத்தின் திராவகம்

இந்தத் திவ்ய ஔஷதம், விஷ சுரம் முதலிய எத்தகைய ஜுரத்தினாலும் தேகம் மெலிந்து வெளுத்துப்போனவர்களுக்கும், வேறு பல வியாதிகளால் தாக்கப்பட்டுப் பலமற்றுப் போனவர்களுக்கும், தாது விருத்தி நாட்டங்கொண்டு பல மருந்துகளைச் சாப்பிட்டு குணமடையாதவர்களுக்கு இது ஒரு அமிர்தமாகும் என்றே நிச்சயமாகக் கூறுவோம். இம்மருந்தை உட்கொள்வதால் மல ஜலம் தாராளமாய்க் கழிந்து பசியின்மையைப் போக்கி ஜீர்ண சக்தியைக் கொடுத்துப் பரிசுத்த இரத்தத்தைப் பெருக்கும். தாது விருத்தி உண்டாகும். தேகம் சிவப்படைந்து மூகம் வசீகரமாகும்.



இம்மருந்தைச் சாப்பிடுகிறவர்கள் தேக திடத்தைப் பெற்று, வலிவுள்ள மக்களைப் பெறுவார்கள். சகல இன்பங்களையும் அனுபவிக்கலாம். ஆண்பெண் இருபாலரும் எப்பொழுதும் உபயோகிக்கலாம்.

பெரியவர்கள் ஒரு அவுன்ஸ் தண்ணீர் அல்லது பசும் பாலில் 10, 12 துளி வரையிலும், சிறியவர்கள் 2-முதல் 6, 7 துளிகள் வரையிலும் காலை மாலை இரு வேளையும் சாப்பிடவேண்டும். இதற்கு யாதொரு பத்தியமுமில்லை. எல்லா ஏழைகளும் வாங்கி உபயோகிக்கும்பொருட்டே மிகக் குறைந்த விலைக்கு விற்கிறோம். ஒரு மாதம் சாப்பிடக்கூடிய மருந்தின் விலை அணா 12. தபாற் செலவு வேறு.

# சிவப்பிரகாச பல் பொடி

இந்தச் சிவப்பிரகாச பல் பொடி மற்ற இதர பல்பொடிகளைப் போலிராமல், அதிக சுகந்தமாகவும், பல்வலி, பல்லில் சொத்தை, ஈறு வளர்ந்திருத்தல், வாய் ரணம், வாய் நாற்றம், பல்லாட்டம் முதலிய வியாதிகளை நீக்குவது மல்லாமல், பல் நன்முய்த் துலங்கும்படிச் செய்யும். வாயில் சதா கம கம வென்னும் மணத்தை உண்டாக்கிக் கொண்டிருக்கும். ஒரு மாதத்திற்கு உபயோகிக்கக்கூடிய பல் பொடி டப்பி 1-க்கு விலை அணா 2.

6 டப்பிகள் அணா 10.



தனலட்சுமி கம்பெனி, நே. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# ஜீவாதார சஞ்சீவி திராவகம்

இது தங்கம், அயம், மற்றும் சில சத்துப் பொருள்களைச் சேர்த்து அநுபோக முறையில் தயார் செய்யப்பட்டதாகும். சரீரத்திலுள்ள நரம்பு நாடிகளும் தளர்ந்து பலங் குறைந்து அகால மரணத்துக் குள்ளாகும் கொடிய விபத்துக்கு இத்திராவகம் கைகண்ட சஞ்சீவியைப் போன்றது. இது சரீரத்திற்கு சுகத்தைக் கொடுத்து, ஆயுளை விருத்திசெய்து; பலவீனம், கைகால் ஓய்ச்சல், சோம்பல், தேகம் மெலிதல், ஜீரணக் குறைவு, புளியேப்பம், பசியின்மை, ஞாபகக் குறைவு, தைரியமின்மை, தாது நஷ்டம், கண்டமாலை, மலச்சிக்கல், நரம்புத் தளர்ச்சி, மார்நோய், சரீரம் வெளுத்தல் முதலிய வியாதிகளை ஒரு வாரத்திற்குள் மாந்திரீகம்போல் குணப்படுத்தும். இது வரையில் எந்த வைத்தியர்களாலும் கண்டுபிடிக்கப்படாத அவுஷதம் இதுவே என்பதை இதை உட்கொண்ட ஐந்து நிமிஷத்தில் தெரிந்து கொள்ளலாம். குழந்தைகள் முதல் பெரியோர்கள் வரையிலும் உபயோகிக்கலாம். புட்டி 1-க்கு விலை ரூ. 1. புட்டி 3-க்கு விலை ரூ. 2—8—0.



# மோஹினி பரிமள கூந்தல் தைலம்




இந்தத் தைலத்தை கூந்தலில் தடவிக்கொண்டால் அன்று மலர்ந்த புஷ்பங்களின் வாசனைக்கு நிகராயிருக்கும். கூந்தலுக்கு வளர்ச்சியைத் தருவதுடன் தலைக் கொதிப்பையும் அடக்கி தேகத்திற்கு ஆரோக்கியத்தைத் தரவல்லது. இதன் விலை அணா 12.

## சுகபேதி மாத்திரை

இந்த மாத்திரையில் 2-முதல் 4-வரையில் தேகநிடமறிந்து சாப்பிட்டால் சுகமாய்ப் பேதியாகிவிடும். இம் மாத்திரையை சிறு குழந்தைகளுக்கு 1-மாத்திரை முதல் தேக நிடமறிந்து முலைப்பாலில் உபயோகிக்கலாம். வாய்க்கசப்பு, குமட்டல், நெஞ்சு கரகரப்பு, வாந்தி, வயிற்றுவலி முதலிய எவ்வித கெட்ட குணம் கிடையாது. உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்,

24-மாத்திரை புட்டி 1-க்கு விலை அணா 4.

---

தனலட்சுமி கம்பெனி, கே. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# காப் கியூர் என்னும் க்ஷய அரி

கப இருமல், இரைப்பு அல்லது மந்தகாசம், க்ஷயம், சளி இருமல், கக்குவாய் இருமல், பெருத்த இருமல், தொண்டை நோய், சுவாசகாசம், கடினமான ஜலதோஷம், அபாயமான சளை இருமல், தொண்டை யெரிச்சல், தொண்டைக் கரகரப்பு, இருமலினால் தூக்கம் பிடியாமை, குளிர்ச்சியான வஸ்துவைச் சாப்பிடுகிறதினாலும் பனியில் அலைவதினாலும் உண்டாகும் சாதாரண இருமல் முதலான வியாதிகளை நாலு தினத்தில் இது கண்டித்துக் கோழையை வெளியில் தள்ளி நன்றாய் அவ்வியாதி கொண்டிருந்தவரை தூங்கச் செய்யும். புட்டி 1-க்கு விலை ரூபா 1.



# கள்ள நோய் நிவாரணி

## இது 3-தினத்தில் குணப்படுத்தும்

மேக உஷ்ணத்தால் தாது கெட மூலத்தில் அக்னி அதிகரிப்பதனால் ஏற்படும் கள்ளநோய். நீரடைப்பு, சதையடைப்பு, பவுத்திரம், அரையாப்பு முதலியன இந்த நோயின் மூலமாய் ஏற்படும். நீர்க்கடுப்பும், குத்தலும், எரிச்சலும் காண்பதுண்டு. இவைகளை சீக்கி நல்ல சுகத்தைக் கொடுக்கக்கூடிய அநுபவ மருந்து இது. பத்தியம் கிடையாது. இதனை உபயோகிக்கும் விவரம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1. தபாற்கூலி வேறு.

# மயிர் போக்கும் சோப்

இது ஒவ்வொருவருக்கும் மிகவும் அத்தியாவசியமானது. சரீரத்தின் எந்தப் பாகத்திலுமுள்ள மயிரை இந்த சோப்பின் உதவியால் பிரயாசையின்றி வெகு சுலபமாய் போக்கிவிடலாம். மயிரைப் போக்கவேண்டிய இடத்தில் கொஞ்சம் ஜலத்தைப் பூசி, அதன்மேல் இந்த சோப்பைத் தேய்த்து ஐந்து நிமிஷம் கழித்து காகித கார்டினாலாவது, ஓலைத் துண்டினாலாவது வழித்தால் அவ்விடத்திலுள்ள மயிர் யாவும் கழிந்து போகும். அந்த இடம் பிறகு மழமழப்பாக விருக்கும். இந்த சோப்பில் துர்நாற்றம் முதலியவை இரா. 3-சோப் கொண்ட பாக் 1-க்கு விலை அணா 14.



# மயிர் போக்கும் சூரணம்

இந்த சூரணத்தை ஜலத்தில் கலந்து, மயிர் போக்கவேண்டிய விடத்தில் தடவி உலர்ந்த பின் உடனே 5-நிமிஷம் பொறுத்து கழுவினால் மயிர் போய்விடும். புட்டி 1-க்கு விலை அணா 8.

---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# புத்திர சந்தான எண்ணெய



ஆண்மலடு சொன்னாலும் சொல்லலாகும்
அப்பனே பெண்மலடு யாரு மில்லை
என்மலடாய்ப் போவதென்று கேட்பா யானால்
இயம்புவேன் கருக்குழியில் சோரிசேர்ந்தால்
ஊன்மிகுந்தால் புழுதரித்தால் உதிரங் கெட்டா
ஓங்கார பிரணவத்தில் வாயு சேர்ந்தால் [ல்
தான்மதத்து விபரீதச் சேர்க்கை செய்தால்
தலையாட்டுப் பேய்பிணியால் தரியாதென்னே

ஸ்திரீகளின் கருக்குழியினிடத்தில் புழுக்கள் உண்டாகி அவ்வப்போது வித்தைப் புசித்துவிடுவதனாலும், விபரீதச் சேர்க்கையாலும், கருக்குழியினிடத்தில் சதை வளர்ந்து சோரி பற்றி இரத்தங் கட்டியிருப்பதாலும், கருக்குழி மதத்துக் கொழுத்திருப்பதாலும், மூலச் சுழியில் வாயு பித்தம் தங்கியிருப்பதனாலும் கருதரிக்காது.

இந்த எண்ணெயைக் காலை மாலை இருவேளையும் 1 அல்லது 2 காசு அளவு உள்ளங்கையில் விட்டுச் சாப்பிடவேண்டியது. இப்படி 15-நாள் சாப்பிட்டால் இது கருக்குழியிலிருக்கும் ஷை குற்றங்களை நீக்கி, கருக்குழியைச் சுத்தப்படுத்தி, மறு மாதத்திலேயே கரு தரிக்கும்படி செய்யும். இது அனுபவமான எண்ணெய். இதற்குக் கடுமையான பத்தியம் கிடையாது.

சிலருக்கு கருதரித்து 2, 3, 4-மாதங்கள் வரையில் தங்கியிருந்து திடீரென்று உடைந்துபோவதுண்டு. இவ்வகைத் தோஷமும் இந்த எண்ணெயில் நிவர்த்தியாகித் தீர்க்காயுளான கரு தரிக்கும். இதன் விலை ரூபா 2.



## சீதபேதி (டிசென்டரி) பவுடர்

இரத்தபேதி, சீதபேதி, சீதமும் இரத்தமும் கலந்த பேதி, மலத்துடன் இரத்தம் வருதல், மூலக் கடுப்பு அடிவயிற்று நோய் முதலான வியாதிகள் குழந்தைகள் முதல் பெரியோர் வரையில் யாருக்கிருந்தாலும் 4-வேளையில் இது அவற்றைத் தப்பாமல் தடுக்கும்.

ஒரு புட்டியின் விலை அணா 8.

## குழந்தை கக்கிருமல் நிவாரணி

இம்மருந்து கக்குவானால் கஷ்டப்படும் பிள்ளைகளுக்கு ஓர் ரக்ஷிணி. இது வெகு நேர்த்தியாகவும், சுகமாகவும், குழந்தைகள் சாப்பிடுவதற்கு இனிப்பாக இருக்கும். இரண்டு மூன்று நாட்களில் கக்கிருமல் கோரம் பொறுத்து கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து சில நாளைக்குள் பூர்த்தியாக குணத்தைத் தரும். இதை உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1—4—0. தபால்செலவு பிரத்தியேகம்.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

தேய்வத்தன்மை பொருந்திய **விக்கிரமாதித்தன் கதை**

ஆண், பெண், பால பாலிகைகள் யாவரும் எளிதில் வாசிக்கும் பொருட்டு இதேமாதிரியான பெரிய எழுத்தில் 628 பக்கங்கள் 48 ஐதீகப் படங்களுடன் அச்சிடப்பட்டிருக்கின்றன. இதன் விலை ரூபா 2

# ஜீவப்பிரம்மைக்ய வேதாந்த ரகஸ்யம்.



கடப்பை ஸ்ரீ பரமஹம்ஸ சச்சிதானந்த யோகீஸ்வரர்

கடப்பை ஸ்ரீ பரமஹம்ஸ ஸச்சிதானந்த யோகீஸ்வரரவர்களால் எழுதப்பெற்ற 10-ம் பதிப்பு "ஜீவப்பிரமைக்ய வேதாந்த ரஹஸ்யம்" என்னும் நூலில் வேதங்களினுடையவும், ருஷிகளினுடையவும், அரும் பெரும் ரகஸ்யங்களை யெல்லாம் திரட்டி, வேதங்கள், உபநிடதங்கள், ஸ்ரீ பகவத்கீதை இன்னும் அரிய பெரிய கோளாய் எடுத்துக் காட்டி யாவரும் உணருமாறு மிக எளிய நடையில் எழுதியுள்ளார்; இதன்றியும் கடவுள் எப்படிப் பட்டவர்; அவர் எங்கு என்ன ரூபத்துடன் இருக்கின்றார்; அவரை அறிவது எப்படி என்பதையும் தெரிவித்திருப்பதுமே யல்லாமல், கோவில்களிலுள்ள மூல விக்கிரகங்களாகிய சுவாமிகளுக்கு தேங்காய்களை உடைத்துக் கற்பூரமேற்றி வணங்கவேண்டுமோ அதன் ரகஸ்யமும் இன்னும் அநேக ரகசியங்களையும் சேர்க்கப்பட்டுள்ளன.

ஷை யோகீஸ்வரர் அவர்களால் எழுதிய நூல்கள்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| அநேக தேவ ரகஸ்யங்களும், அநேக படங்களும் அடங்கிய பதினோராம் பதிப்பு "ஜீவப் பிரம்மைக்ய வேதாந்த ரஹஸ்யம்" உயர்ந்த காலிகோ பைண்டு ... ... ... | 4 | 0 |
| ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாத ரூபமாய் எழுதிய ஸ்ரீ பகவத்கீதை நான்காம் பதிப்பு ... ... ... | 2 | 4 |
| ஸ்ரீ கபீர்தாஸ் சரித்திரம் ... ... ... ... | 2 | 4 |
| மேற்படி தெலுங்கு கபீர்தாஸ் சரித்திரம் ... ... | 2 | 4 |
| யோகாப்பியாசம் செய்ய வேண்டிய முறைகளை உபதேசிக்கும் நூல் | 1 | 8 |
| மாயையின் ரகஸ்யார்த்தம் வெளிப்படுத்தி மனதை திறத்தும் நூல்... | 0 | 8 |
| தத்துவ பரிசோதனை அன்னதான பலன் என்னும் நூல் | 0 | 8 |
| சரீர தேவாலய ரஹஸ்யார்த்த பாரிஜாதம் இது மிகவும் சிரேஷ்டமான நூல் ... ... | 0 | 6 |
| இந் நூலாசிரியரின் பூர்வ ஜன்ம இஜ்ஜன்ம சரித்திரம் ... | 0 | 6 |
| மனோ ஓட்டத்தை திறத்திக் காட்டும் நூல் ... ... | 0 | 4 |
| ஜனன மரண ரஹஸ்யம் ... ... ... ... | 0 | 8 |
| பரப்பிரஹ்ம ரகசியம் 0 6 0 தமிழ் பாமாலை ... | 0 | 2 |

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**